ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# शारीरककारिकावली

## शारीरकाधिकरणमुक्तावली च

( सुदर्शनपत्राधिपकृत - द्रमिडभाषाविवरणसहिता )

# சாரீரககாரிகாவளீ

## (சாரீரகாதி₄கரணமுக்தாவளியுடன் சேர்ந்தது)

[ 'ஸுதர்சனம்' ஆசிரியர் எழுதிய
தமிழ் விவரணத்துடன் கூடியது. ]

[இரண்டாம் பாகம்]

*இயற்றியவர் –*


கோழியாலம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி.



கிடைக்குமிடம்:–

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
['ஆசிரியர்' ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்]
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது





விலை ரூ. 5-00] [தபால்கூலி 0-75.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சிராப்பள்ளி.



ஸ்ரீ உ. வே.

கோழியாலம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி

श्रीवेङ्कटार्यनिजतातपदाब्जभृङ्गं

श्रीराघवार्यनिजपूर्वजलब्धबोधम् ।

वङ्गीशवंशकलशांबुधिपूर्णचन्द्रं

श्रीश्रीनिवासगुरुवर्यमहं प्रपद्ये ॥

திருநக்ஷத்திரம் ஆவணி அச்வினி.

श्रीः

श्रीमते रङ्गरामानुजमहादेशिकाय नमः

# भूमिका

[ अभिनवदेशिक उत्तमूर् वीरराघवाचार्याः ]

१. श्रीशब्दवङ्गिकुलवारिधिकौस्तुभानां
काले त्वधीतपरिपूर्णयजुश्श्रुतीनाम् ।
अङ्गानि शास्त्रमधिगम्य च तर्कमारात्
आचार्यतल्लजसमाश्रयणोज्ज्वलानाम् ॥

२. श्रीरङ्गलक्ष्मणमुनिः प्रथितो य आसीत्
पूर्वाश्रमेऽस्य महतो निजसोदरस्य ।
श्रीराघवार्यशुभनामसुविश्रुतस्य
संसेवयाऽऽप्तसकलागममौलिभूम्नाम् ॥

३. स्वाभाविकानुपमशीलसुवृत्तवेष-
श्रीब्रह्मवर्चसपटुव्यवहारभाजाम् ।
हस्त्यद्रिनाथविविधोत्सववीथिवेद-
पारायणाचरणपूर्णकृतार्थतानाम् ॥

४. गार्हस्थ्यलक्ष्मसदपत्यकुलार्चितानां
प्राज्ञप्रसिद्धशुभवृत्तसुतश्रितानाम् ।
अध्यापिताखिलयजुश्श्रुतिकाव्यशास्त्र-
वेदान्तयुग्मसरहस्यमहाकृतीनाम् ॥

५. श्रीरङ्गलक्ष्मणगुरूत्तममङ्गलादि-
नानास्तवप्रणयनप्रथिते कवित्वे ।
अन्तादिलक्ष्मणशताद्भुतगद्यमुख्य-
व्याख्यानपद्यकृतिविश्रुतनैपुणानाम् ॥

६. सम्यक् यतीन्द्रमतदर्पिकयोक्तमर्थं
पद्यैस्सुबोधमधुरैः सकलं विबोध्य ।
शारीरकाध्ययनसक्तजनप्रवृत्ति-
साफल्यशैघ्र्यपरिकल्पनचिन्तकानाम् ॥

७. विद्याक्रमेण वयसा च ममाग्रजानां
श्रीश्रीनिवासविदुषां हि कृती इमे द्वे ।
शारीरकाधिकरणैः वरदस्तुतिश्च
प्रत्येकसूत्रविषयार्थपरा कृतिश्च ॥

८. तत्पुत्रतार्किकसुशीलविरक्तविद्वत्-
श्रीरङ्गनाथकृतिना तदतिप्रियेण ।
प्राज्ञेन वैष्णवसुदर्शनकारिणा च
संपादिते सुरुचिरं भजतः प्रकाशम् ॥

९. एते कृती विषयसंशयपूर्वपक्ष-
सिद्धान्तसङ्गतिमुखस्फुटबोधनेद्धे ।
विद्यालयेषु विबुधैः परिकल्प्य पाठ्य-
ग्रन्थप्रवेशमनघैः परिरक्षणार्हे ॥

१०. अध्यायद्वयमधुना
मुद्रितमालोक्य मोदमानेन ।
इत्थं न्यवेदि संप्रति
वात्स्यश्रीवीरराघवार्येण ॥



ஸ்ரீ:

அபி₄நவதே₃ஶிக ஶ்ரீ உ. வே உத்தமூர்

## வீரராக₄வாசார்ய ஸ்வாமியின்

# வடமொழி பூ₄மிகையின்

## தமிழ் மொழிபெயர்ப்பு

ஶாரீரககாரிகாவளி, ஶாரீரகாதி₄கரண முகதாவளி என்னும் இவ்விரு நூலகளேயும இயறறிய ஸவாமி பறபல சிறப்புகசளுடையவர்,

1. ஸ்ரீஶப்₃த₃ம் வங்கி₃புர தகுலமபி வமஶமாகிற கடலில உதித்த கௌஸதுப₄மணி போனறவா. உரிய காலததில யஜுர்வேத₃ததைப பரிபூரணமாக அத்₄யயனம செயதவா. வேதா₃ங்க₃ங்களேயும, தாகக ஶாஸதரததையும அதி₄கரிததவர் ஆசாரய ஶ்ரேஷ்ட₂ரான கோழியாலம் ஸவாமியை ஆஶ்ரயிதது உயவுபெற்றவர் இந்த ஸவாமி.

2. ஸ்ரீ ரங்க₃ராமாநுஜமுனிவா எனறு ப்ரஸித்₃தி₄பெறறவரான அநதக கோழியாலம ஸவாமி, பூாவாஶ்ரமததில இநத ஸவாமிககுத தமயனுராவா பூாவாஶ்ரமததில் அவரது புகழபெறற திருநாமம் ஸ்ரீராக₄வாசார்யர் எனபது. அவரை ஆஶ்ரயிதது உப₄யவேதா₃நதங்களின பொருளே அறியப்பெறறவா இநத ஸவாமி.

3 இயலவானவையும, ஒபபறறவையுமான நற்பணபுகளேயும, நலலொழுககததையும, நலல வேஷததையும, சிறநத ப்₃ரஹ்ம வாசசஸஸையும, அழகான பேசசுவழக்கையும உடையவா. அத்திகிரியருளாளனின் பலவித₄மான உதஸவஙகளில் திருவீதிகளில நடைபெறும வேத பாராயணங்களில பரிபூரணமாக அந்வயிககும பேறு பெறறவர் இநத ஸவாமி

4 க₃ருஹஸத₂த₄ாமத்துககு லக்ஷணமான நனமககட்பேறறையும் பெறறவர். அதிலும, பேரறிவாளாகளாய, ஸுப்ரஸித்₃த₄ாகளாய, நலலொழுககம நிரமபியவாகளான பிளளேகளாலே ஆஶ்ரயிககபபட்டவா பூாணமான யஜுர்வேத₃ம, காவயஙகள, ஶாஸதரங்கள, உப₄ய வேதா₃நதங்கள, ரஹஸ்யஙகள ஆகிய தி₃வயக₃ரநத₂ங்களேப பலருககுக் கறபித்தவா இநத ஸவாமி

5. ஆசாாயரான ஸ்ரீரங்க₃ராமாநுஜ கு₂ருததமா விஷயமான மங்க₃ளம், எமபெருமானேப பறறியதான ஸவரூபாத₃யஷ்டகஸ்துதி, ஸ்ரீக்ருஷ்ணமங்க₃ளம் முதலான பல துதி நூல்களே இந்த ஸ்வாமி இயறறியுளளாா. அவறறில் இவருடைய கவித்திறமை ஒளிவிடுகின்றது.

७. वचनेन विरोधे हि नैव न्यायः प्रवर्तते।
ततो जगत्कारणं तत् प्रधानमिति चेन्न तत्॥

सि ८. न्यायाविरुद्धस्मृत्योपबृंहितान्निगमादपि।
दुर्बलस्तद्विरुद्धस्मृत्युपबृंहित इत्यतः॥

---

எப்படியெனில்: 'சேதநம், அசேதனம் என்னும் இருவகைப் பொருள்களடங்கிய உலகிற்கு அசேதனமேயான மூலப்ரக்ருதி காரணமாயிருப்பது பொருந்தாமை' முதலான ந்யாயங்களுக்கு விருத்$_3$த$_4$மாயிருக்கையாலே, கபிலஸ்ம்ருதி கைக்கொள்ளத்தகாததேயாகும்— என்பதே அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாத$_4$ானம் பின்வருமாறு:— "**நஹி வசந விரோதே$_4$ ந்யாய: ப்ரவர்த்ததே**" [ வசனத்தோடு முரண் படுமிடத்தில் ந்யாயம் விலைசெல்லாது ] என்னும் ந்யாயத்தையொட்டி, கபிலஸ்ம்ருதிக்கு முரண்பட்ட அந்த ந்யாயங்கள் விலைசெல்லாவாகையால் கபிலஸ்ம்ருதி கைக் கொள்ளத்தக்கதேயாகும். ஆகையால், கபிலஸ்ம்ருதியைக் கொண்டு 'ப்ரத$_4$ானம் ஜகத்காரணம்' என்பதே வேதார்த்தம் என்று நிர்ணயிக்கத்தட்டில்லை.

8–13. **ஸித்தாந்தம்**– இப்பூர்வபக்ஷம் தவறு. முதலத்தியாயத்திற்சொன்ன ந்யாயங்களுக்கு முரண்பட்ட கபில ஸ்ம்ருதியைக்கொண்டு வேதார்த்தத்தை நிர்ணயிப்பதைக் காட்டிலும், அந்த ந்யாயங்களுக்கு முரண்படாத மநு முதலான ஸ்ம்ருதிகளைக்கொண்டு வேதார்த்தத்தை நிர்ண யிப்பதே தக்கதாகும். ஆராய்ந்தால், இங்கு ந்யாயத்துக்கும் வசனத்துக்கும் விரோதமேற்படவில்லை. மந்வாதி$_3$வசனத்துக் கும், கபிலவசனத்துக்குமே விரோதமேற்பட்டிருக்கிறது. ஆகையால், முதலத்தியாயத்திற் கூறிய ந்யாயங்களோடு ஒத்திருக்கும் மந்வாதிவசனங்களைக் கைக்கொண்டு, அவற் றோடு ஒவ்வாத கபிலவசனத்தைக் கைவிடுவதே தக்கது.

ஸ்ரீ :

# ப்$_3$ரஹ்மஸூத்ரத்$_3$விதீயாத்$_4$யாயாதி$_4$கரணானுக்ரமணிகை



**ப்$_3$ரஹ்மஸூத்ரத்$_3$விதீயாத்$_4$யாயாதி$_4$கரணானுக்ரமணிகை முற்றிற்று.**

---

# ப்$_3$ரஹ்மஸூத்ரத்$_3$விதீயாத்$_4$யாயஸூத்ராநுக்ரமணிகை

## அ

**ப்$_3$ரஹமஸூதரத$_3$விதீயாத$_4$யாயஸூத்ராநுகரமணிகை முறறிறறு.**



श्रीः

## ।। द्वितीयाध्यायब्रह्मसूत्राणि ।।

### प्रथमः पादः

#### 1. स्मृत्यधिकरणम् ।।

1. स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् ।।

2. इतरेषां चानुपलब्धेः ।।

#### 2. योगप्रत्युक्त्यधिकरणम् ।।

3. एतेन योगः प्रत्युक्तः ।।

#### 3. विलक्षणत्वाधिकरणम् ।।

4. न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात् ।।

5 अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम् ।।

6. दृश्यते तु ।।

7. असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात् ।।

8. अपीतौ तद्वत्प्रसङ्गादसमञ्जसम् ।।

9. न तु दृष्टान्तभावात् ।।

10. स्वपक्षदोषाच्च ।।

11. तर्काप्रतिष्ठानादपि ।।

12. अन्यथानुमेयमिति चेदेवमप्यनिर्मोक्षप्रसङ्गः ।।

#### 4 शिष्टापरिग्रहाधिकरणम् ।।

13. एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याताः ।।

#### 5. भोक्त्रापत्त्यधिकरणम् ।।

14. भोक्त्रापत्तेरविभागश्चेत्स्याल्लोकवत् ।।

#### 6. आरम्भणाधिकरणम् ।।

15. तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः ।।

16 भावे चोपलब्धेः ।।

17. सत्त्वाच्चापरस्य ।।

18 असद्व्यपदेशान्नेति चेन्न धर्मान्तरेण वाक्यशेषाद्युक्तेः शब्दान्तराच्च ।।

19. पटवच्च ।।

20 यथा च प्राणादिः ।।

#### 7. इतरव्यपदेशाधिकरणम् ।।

21. इतरव्यपदेशाद्धिताकरणादिदोषप्रसक्तिः ।।

22. अधिकं तु भेदनिर्देशात् ।।

23. अश्मादिवच्च तदनुपपत्तिः ।।

#### 8. उपसंहारदर्शनाधिकरणम् ।।

24. उपसंहारदर्शनान्नेति चेन्न क्षीरवद्धि ।।

92. तदभिध्यानादेव तु तल्लिङ्गात्सः ॥

93. विपर्ययेण तु क्रमोऽत उपपद्यते च ॥

94 अन्तरा विज्ञानमनसी क्रमेण तल्लिङ्गादिति चेन्नाविशेषात् ॥

95. चराचरव्यपाश्रयस्तु स्यात्तद्व्यपदेशोभाक्तस्तद्भावभावित्वात् ॥

21. आत्माधिकरणम् ॥

96. नात्मा श्रुतेर्नित्यत्वाच्च ताभ्यः ॥

22. ज्ञाधिकरणम् ॥

97. ज्ञोऽत एव ॥

98 उत्क्रान्तिगत्यागतीनाम् ॥

99 स्वात्मना चोत्तरयोः ॥

100 नाणुरतच्छ्रुतेरिति चेन्नेतराधिकारात् ॥

101. स्वशब्दोन्मानाभ्यां च ॥

102 अविरोधश्चन्दनवत् ॥

103 अवस्थितिवैशेष्यादिति चेन्नाभ्युपगमाद्धृदि हि ॥

104 गुणाद्वाऽऽलोकवत् ॥

105 व्यतिरेको गन्धवत्तथा च दर्शयति ॥

106 पृथगुपदेशा त् ॥

107. तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् ॥

108 यावदात्मभावित्वाच्च न दोषस्तद्दर्शनात् ॥

109. पुंस्त्वादिवत्त्वस्य सतोऽभिव्यक्तियोगात् ॥

110 नित्योपलब्ध्यनुपलब्धिप्रसङ्गोऽन्यतरनियमो वान्यथा ॥

23. कर्त्रधिकरणम् ॥

111. कर्ता शास्त्रार्थवत्त्वात् ॥

112. उपादानाद्विहारोपदेशाच्च ॥

113. व्यपदेशाच्च क्रियायां नचेन्निर्देशविपर्ययः ॥

114. उपलब्धिवदनियमः ॥

115. शक्तिविपर्ययात् ॥

116. समाध्यभावाच्च ॥

117. यथा च तक्षोभयथा ॥

24. परायत्ताधिकरणम् ॥

118. परात्तु तच्छ्रुतेः ॥

119. कृतप्रयत्नापेक्षस्तु विहितप्रतिषिद्धावैयर्थ्यादिभ्यः ॥

25. अंशाधिकरणम् ॥

120 अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके ॥

121. मन्त्रवर्णात् ॥
122. अपि स्मर्यते ॥
123. प्रकाशादिवत्तु नैवं परः ॥
124 स्मरन्ति च ॥
125 अनुज्ञापरिहारौ देहसंबन्धात् ज्योतिरादिवत् ॥
126. असन्ततेश्चाव्यतिकरः ॥
127. आभासा एव च ॥
128. अदृष्टानियमात् ॥
129. अभिसन्ध्यादिष्वपि चैवम् ॥
130. प्रदेशभेदादिति चेन्नान्तर्भावात् ॥

॥ इति तृतीयः पादः ॥

॥ चतुर्थः पादः ॥

26. प्राणोत्पत्त्यधिकरणम् ॥

131. तथा प्राणाः ॥
132. गौण्यसंभवात् तत्प्राक्श्रुतेश्च ॥
133. तत्पूर्वकत्वाद्वाचः ॥

27. सप्तगत्यधिकरणम् ॥

134. सप्त गतेर्विशेषितत्वाच्च ॥
135. हस्तादयस्तु स्थितेऽतो नैवम् ॥

28. प्राणाणुत्वाधिकरणम् ॥

136. अणवश्च ॥
137. श्रेष्ठश्च ॥

29. वायुक्रियाधिकरणम् ॥

138. न वायुक्रिये पृथगुपदेशात् ॥
139. चक्षुरादिवत्तु तत्सहशिष्टयादिभ्यः ॥
140. अकरणत्वाच्च न दोषस्तथाहि दर्शयति ॥
141. पञ्चवृत्तिर्मनोवद्व्यपदिश्यते ॥

30 श्रेष्ठाणुत्वाधिकरणम् ॥

142 अणुश्च ॥

31. ज्योतिराद्यधिष्ठानाधिकरणम् ॥

143. ज्योतिराद्यधिष्ठानं तु तदामननात्प्राणवता शब्दात् ॥
144. तस्य च नित्यत्वात् ॥

32 इन्द्रियाधिकरणम् ॥

145. त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात् ॥
146. भेदश्रुतेर्वैलक्षण्याच्च ॥

33 संज्ञामूर्तिक्लृप्त्यधिकरणम् ॥

147. संज्ञामूर्तिक्लृप्तिस्तु त्रिवृत्कुर्वत उपदेशात् ॥
148. मांसादि भौमं यथाशब्दमितरयोश्च ॥
149 वैशेष्यात्तु तद्वादस्तद्वादः ॥

॥ इति चतुर्थः पादः ॥

॥ द्वितीयाध्यायः समाप्तः ॥

श्रीः
श्रीमते श्रीराघवार्यमहादेशिकाय नमः

# ॥ श्रीशारीरककारिकावली ॥

## ॥ अथ द्वितीयाध्याये प्रथमः पादः ॥

### ॥ स्मृत्यधिकरणम् ॥ (२-१-१)

सू ॥ स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् ॥ (२-१-१)

१. नारायणाख्यं ब्रह्मैव जगद्धेतुतया श्रुतौ ।
प्रतिपाद्यमिति प्रोक्तमाद्येऽध्याये सुनीतिभिः ॥

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீசாரீரககாரிகாவளீ விவரணம்

## இரண்டாமத்தியாயம் முதற்பாதம்

### ஸ்ம்ருத்யதிகரணம் (2-1-1)

**ஸ்ம்ருத்யநவகாஶதோ₃ஷ ப்ரஸங்க₃ இதி சேந்நாந்ய - ஸ்ம்ருத்யநவகாஶதோ₃ஷ ப்ரஸங்க₃ாத் ॥ 2-1-1 ॥**

**ஸம்ருத்யநவகாஶதோ₃ஷப்ரஸங்க₃:** **இதி சேத்**–*(ப்ரஹ்ம காரணவாததகதை ஒபபுக்கொண்டால) கபிலஸ்ம்ருதியானது பயனுடையதாவதற்கு இடமிலலாமறபோய் விடுகையாகிற தோஷம ஏறபடுமே எனில்;* **அநயஸம்ருத்யநவகாஶ தோ₃ஷ பரஸங்க₃ாத**—*(ப்ரத₄ாநகாரண வாத₃த்தை ஒப்புக கொண்டால்) மநு முதலான மற்ற பல ஸ்மருதிகள் பயனுடையனவாவதறகு இடமிலலாமற் போய்விடுகையாகிற தோஷம் ஏற்படுமாகையால,* **ந**—*முற்கூறிய வாதம பொருந்தாது.*

२. परपक्षान्निराकृत्य स्थूणानिखननक्रमात्।
पूर्वोक्तार्थं दृढीकर्तुमेषोऽध्यायः प्रवर्तते॥

३. पूर्वं साङ्ख्यौ निरस्तौ द्वौ वेदान्तार्थप्रकाशनात्।
निरीश्वरोऽत्र कपिलस्मृतिग्राही निरस्यते॥

पू ४. आप्तप्रणीतस्मृत्यैव वेदान्तार्थविनिर्णयः।
कार्योऽल्पश्रुतमन्दैस्तत् वेदोक्तकपिलोक्तया॥

---

*1-3.* **அவதாரிகை.** ''ஸ்ரீமந்நாராயணனாகிற பரப்ரஹ்மமே உலகிற்குக் காரணமாக வேதத்தில் சொல்லப்படுகிறான்'' என்று நல்ல நியாயங்களைக்காட்டி இந்த ஶாரீரகஶாஸ்திரத்தின் முதலத்தியாயத்தில நிரூபிக்கப்பட்டது. தூணைக குழியிலிட்டு ஆட்டியாட்டி உறுதியாக பூமியில ஊன்றுவது போலே. முன அத்தியாயத்தில நிர்ணயிதத ப்ரஹ்மகாரணவாதத்துக்கு முரணைப் பேசும் எதிரிகளின் வாதங்களை எடுததுநிரஸிப்பதன மூலம் ப்ரஹ்மகாரணவாதத்தையே நிலைநாட்டுவதறகாக இவவிரண்டாமததியாயம தொடங்குகிறது. முன் அதிகரணங்களில் நிரீஶ்வரஸேஶ்வரஸாங்க்யர்களாகிற இருவகையான ஸாங்க்யர்களும் உபநிஷதர்த்தங்களை காட்டி நிரஸிககப்பட்டனர். இவ்வதிகரணததில் கபிலஸ்ம்ருதியை ப்ரமாணமாகக கொண்டு மறுபடி எழுந்த நிரீஶ்வர ஸாங்க்யன் நிரஸிக்கப்படுகிறான்.

*4-7.* **பூர்வபக்ஷம்.** உபனிஷத்துக்களில் ததவார்த்தங்கள் தெளிவாகக் கூறப்படவில்லையாகையாலே, வழககொழிந்த உபநிஷத் பாகங்களிலுள்ள அர்ததங்களையும் தம் யோக மஹிமையாலே ஸாக்ஷாத்கரிதத ஆப்தராலே இயற்றப்பட்ட ஸ்ம்ருதியைக் கொண்டே புல்லிய கலவியறிவையும் கேள்வியறிவையுமுடைய மனிதாகள் உபநிஷதர்த்தங்களைத் தெளிந்தறியவேண்டும். ஆகையால், ''ருஷிம் பரஸூதம் கபிலம'' [ஶ்வே 5-2] எனறு உபனிஷத்தில கொண்டாடப்பட்ட

५. स्मृत्या तत्त्वैकपरया न्याय्यो वेदार्थनिर्णयः।
अन्यथाऽनवकाशोऽस्याः तस्मादखिलकारणम्॥
६. प्रधानमेव वेदान्तवेद्यमित्येव युक्तिमत्।
न च वाच्यमयुक्तत्वात्प्रधानं नेति कारणम्॥

---

வராய், ஆப்தரான கபிலரால் இயற்றப்பட்டதாய், தத்துவத்தைக் காட்டுவதற்காகவே ஏற்பட்டதான கபிலஸ்ம்ருதியைக்கொண்டு வேதார்த்தத்தை நிர்ணயிப்பதே தகும். அப்படி நிர்ணயிக்கும்போது, மூலப்ரக்ருதியெனும் ப்ரதா₄னமே அனைத்துலகிற்கும் காரணமாகிறது என்பதே வேதார்த்தம் என்று கபிலஸ்ம்ருதியிலிருந்து தேறுகிறது. ஆப்தர்களான மநு முதலான மற்றவர்கள் இயற்றிய ஸ்ம்ருதிகளிலிருந்து ப்ரஹ்மமே ஜகத்காரணம் என்பதே வேத₃ார்த்த₂ம் என்று தேறுகிறதே எனில்: அந்த ஸ்ம்ருதிகள் வேதத்தின் பூர்வபாகத்தில் சொன்ன யாகாதிகர்மங்களையே விரிவாகப் பேசுகின்றனவாகையால் அந்த அம்சத்தில் அந்த ஸ்ம்ருதிகள் பயனுடையவையாவதற்கு இடமிருக்கிறது. இக்கபிலஸ்ம்ருதியோவெனில், யாக₃ாதி₃ கர்மங்களைப்பற்றிப் பேசாமல் வேதத்தின் உத்தரப₄ாக₃மான உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட ஜகத்காரணப்பொருளைப்பற்றியே பேசுகிறதாகையால், அவ்வர்த்தத்தை நிர்ணயிக்க இந்தஸ்ம்ருதியையே கைக்கொள்ளவேண்டும். இல்லாவிடில், ஓரளவாவது பயனுடையவையாகும் அந்த ஸ்ம்ருதிகளைப்போலல்லாமல், இந்த ஸ்ம்ருதி முழுவதும் பயனற்றதாகிவிடும். ஆகையால், இந்த ஸ்ம்ருதியைக்கொண்டு ப்ரத₄ானமே ஜகத்காரணம் என்பதே வேதார்த்தம் என்று கொள்வதே தக்கது. இனி, ஓராக்ஷேபம் எழக்கூடும். அதாவது:— இப்படி கபிலஸ்ம்ருதியைக்கொண்டு மூலப்ரக்ருதியே ஜகத்காரணம் என்று கொண்டால், அது முதலத்தியாயத்திற்சொன்ன யுக்திகளுக்குப் (ந்யாயங்களுக்குப்) பொருந்தாமலிருக்கிறதே;

७. वचनेन विरोधे हि नैव न्यायः प्रवर्तते।
ततो जगत्कारणं तत् प्रधानमिति चेन्न तत्॥

सि ८. न्यायाविरुद्धस्मृत्योपबृंहितान्निगमादपि।
दुर्बलस्तद्विरुद्धस्मृत्युपबृंहित इत्यतः॥

---

எப்படியெனில: 'சேதநம, அசேதனம் எனனும் இருவகைப் பொருள்களடங்கிய உலகிற்கு அசேதனமேயான மூலப்ரக்ருதி காரணமாயிருபபது பொருந்தாமை' முதலான நியாயங்களுக்கு விருத்₃த₄மாயிருக்கையாலே, கபிலஸம்ருதி கைககொளள ததகாதசேயாகும்— என்பதே அவ்வாக்ஷேபம். இதறகு ஸமாத₄ானம் பின்வருமாறு:— "**நஹி வசந விரோதே₄ நயாய: ப்ரவாத்ததே**" [வசனத்தோடு முரண் படுமிடத்தில நயாயம விலைசெல்லாது] எனனும நியாயததையொட்டி, கபிலஸ்ம்ருதிக்கு முரண்பட்ட அநத நியாயங்கள் விலைசெல்லாவாகையால கபிலஸ்ம்ருதி கைக் கொள்ளததககதேயாகும். ஆகையால, கபிலஸ்ம்ருதியைக கொண்டு 'ப்ரத₄ானம ஜகத்காரணம' எனபதே வேதார்ததம் என்று நிர்ணயிககததட்டிலலை.

8–13. **ஸித்தாந்தம்**— இப்பூர்வபக்ஷம் தவறு. முதலத்தி யாயத்திறசொன்ன நியாயங்களுககு முரணபடட கபில ஸ்மருதியைககொண்டு வேதாாத்தத்தை நிாணயிபபதைக காட்டிலும், அந்த நியாயஙகளுககு முரண்படாத மநு முதலான ஸ்ம்ருதிகளைககொண்டு வேதார்ததத்தை நிாண யிப்பதே தக்கதாகும். ஆராய்ந்தால், இங்கு ந்யாயததுககும் வசனத்துக்கும் விரோதமேறபடவிலலை. மந்வாதி₃வசனததுக கும், கபிலவசனததுக்குமே விரோதமேறபட்டிருகிறது. ஆகையால். முதலத்தியாயததிற கூறிய நயாயஙகளோடு ஒத்திருக்கும் மந்வாதிவசனஙகளைக் கைககொண்டு, அவற் றோடு ஒவ்வாத கபிலவசனத்தைக் கைவிடுவதே தக்கது.

९. श्रुतिस्तुतोक्त्याप्तनममन्वादिस्मृतिभिः कृतम्।
उपबृंहणमेव स्यात् ग्राह्यं भूयोऽन्यथा महान्॥
१०. आम्नामनवकाशत्वरूपदोषस्समापतेत्।
न ह्यासां सावकाशत्वं भवेद्धर्मोपबृंहणात्॥

மேலும், ப்ரதானகாரணவாதத்தைச் செய்பவரான கபிலரைக்காட்டிலும், மநு முதலானோர் ஆப்ததமரானவர். "யத்₃வை கிஞ்ச மநுரவத₃த்தத்₃பே₄ஷஜம்" [யஜு-அஷ்ட 3-2-11] [மநு சொன்னது அனைத்தும் மருந்தாகும்] "ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:" [தை-ஆர1-9-35] [பராசரரின் புத்திரரான வியாஸரன்றோ சொன்னார்] என்கிறபடியே மநு, வியாஸர் முதலானோர் தத்துவத்தை உள்ளபடி ஸாக்ஷாத்கரித்தோடன்றியில், அதை உள்ளபடி உரைப்பவர்கள் என்று அவர்களுடைய வார்த்தைக்கும் வேதத்தில் பெருஞ்சிறப்பு கூறப்பட்டுள்ளது. கபிலருடைய வார்த்தைக்கு இப்படி சிறப்புக் கூறப்படவில்லை. மேலும், கபிலஸ்ம்ருதி ஒன்றே ப்ரதா₄னகாரணவாதத்தைச் செய்கின்றது, மநுவினுடையது முதலான பல ஸ்ம்ருதிகள் ப்ரஹ்மகாரணவாதத்தைச் செய்கின்றன. ஆகையால், "பூ₄யஸாம் ஸ்யாத்₃ப₃லீயஸ்த்வம்" [அதிக எண்ணிக்கையுடையதே அதிக பலமுடையது] என்னும் ந்யாயப்படியும் மநுஸ்ம்ருதி முதலானவையே கைக்கொள்ளத்தக்கவை. இல்லாவிடில் இத்தனை ஸ்ம்ருதிகளும் வீணாகப்போய்விடுகையாகிற பெரியதோஷம் ஏற்படும். யாகம் முதலான காமங்களை விவரிப்பதன்மூலம் அவை பயனுடையவையாகலாமே என்று பூர்வபக்ஷத்தில் கூறியதும் தவறு. "இஷ்டாபூர்த்தம் ப₃ஹுதா₄ ஜாதம் ஜாயமானம் விஶ்வம் பி₃ப₄ர்த்தி பு₄வநஸ்ய நாபி₄:" [தை-நா 1-6] [முக்காலத்திலும் செய்யப்படும் யாகங்களாகிற இஷ்டங்கள், குளம் வெட்டுதல் முதலான பூர்த்தங்கள் முதலிய எல்லா க₄ர்மங்களையும் ஜக₃த்₃கா₄ரணனான இந்த பகவான் (ஆராத்₄

११. यतस्तेषां च धर्माणां पराराधनरूपता ।
"इष्टापूर्त"मिति श्रुत्या "यज्ञैस्त्व"मिति च स्मृतेः ॥
१२. ज्ञायतेऽतः कापिलोक्त्योपबृंहणमसङ्गतम् ।
वेदोपबृंहणं नाम तदुक्तार्थप्रकाशनम् ॥
१३. कापिल्यास्तद्विरुद्धत्वात् न तत्संभावनार्हता ।
"ऋषिं प्रसूत"मित्युक्त्या नैवाप्ततमता भवेत् ॥

---

யஞாயிருந்துகொண்டு) தரிக்கிறான்] முதலான ஶ்ருதிகளிலும், "யஜ்ஞைஸ்ஸ த்வமிஜ்யஸே நித்யம் ஸர்வதே3வமயாச்யுத। ஹவ்யகவ்யபு4கே3கஸ் த்வம் பித்ருதே3வ ஸ்வரூபத்4ருக்॥' [ வி-பு 5-20-97 ] [ ஸர்வதே3வஶரீரியான அச்சுதனே! நீயே எல்லா யஜ்ஞங்களாலும் எப்போதும் ஆராதிக்கப் படுகிறாய். தேவஶரீரியாயிருந்துகொண்டு ஹவிஸ்ஸுக்களை யும், பித்ருஶரீரியாயிருந்துகொண்டு கவ்யங்களையும் புஜிப் பவன் நீயே ] முதலான ஸ்மருதிகளிலும் முற்கூறிய யஜ்ஞங்கள் பரமபொருளுக்கு ஆராதனமாயிருந்துகொண்டே நிறம்பெறுகின்றன என்று கோஷிக்கப்படுகிறது. ஆகை யால், ஆராத்யனான பரமபுருஷனைச் சொல்லுவதில் மந்வாதி3 ஸ்ம்ருதிகளுக்கு நோக்கில்லையெனில், ஆராத4னமான யஜ்ஞாதிகளை அவை விவரிப்பதும் பயனற்றதாகி, அந்த ஸ்ம்ருதிகள் முழுவதும் வீணாகவே போய்விடும். ஆக, இக்காரணங்களால், கபிலஸ்மருதியைக்கொண்டு வேதார்த் தத்தை விளக்குவது பொருந்தாது என்று நிரூபிக்கப்பட்ட தாயிற்று. மேலும், வேதத்தை உபப்3ருமஹணம் செய்வ தாவது வேதத்திற்சொன்ன அர்த்தத்தை விளக்குகையே யாகும்; ஆகையால், சேதனாசேதனங்களை சரீரமாகக்கொண்ட பரமசேதனனை நாராயணனே ஜகத்காரணமென்று பலவிடங் களில் பறைசாற்றும் வேதத்துக்கு நேரே முரண்பட்ட கபில ஸ்ம்ருதியானது வேதத்துக்கு உபப்3ருமஹணமாகும் என்று எண்ணவேயிடமில்லை. "ருஷிம் ப்ரஸூதம்" [ஶ்வே5-2] என்று

सू ॥ इतरेषां चानुपलब्धेः ॥ (२-१-२)

१४. साक्षात्कृतातीन्द्रियार्थजातानामात्मयोगतः ।
वेदान्तविद्वरिष्ठानां मन्वादीनां च भूयसाम् ॥

१५. कपिलोक्तप्रकारेण तत्त्वस्यानुपलब्धितः ।
एतत्स्मृतिर्भ्रान्तिमूलेत्यनया नार्थनिर्णयः ॥

॥ इति स्मृत्यधिकरणम् ॥

---

உபனிஷத்தில கபிலரை 'ருஷி' [தத்துவத்தை அறிந்தவா] என்று கூறிறதேயொழிய, மங்வாதிகளைப்போலே தத்துவத்தை உள்ளபடி உரைப்பவர் என்று கொண்டாடவில்லை. ஆகையால,அவர் மங்வாதிகளைப்போல ஆப்தநமராகமாட்டார்.

## இதரேஷாம் சாநுபலப்₃தே₄: ॥ 2-1-2 ॥

இதரேஷாம ச—மனு முதலான ஸ்ம்ருதிகாநதாக களுககு· அநுபலப்₃தே₄ —( கபிலருககு ஏறபட்ட காட்சி ) ஏறபடவில்லையாகையால் ( கபிலஸ்ம்ருதி வேதோப ப₃ரும்ஹணமாகாது. )

14-15. இனி, "கபிலரானவா தன யோக₃மஹிமையால தத்துவங்களை உள்ளபடி ஸாக்ஷாத்கரிததிருக்கையாலே. அவருடைய ஸமருதியை ஒட்டி வேதாநதாாததத்தை நிர்ணயிககவேணடாமோ? மங்வாதிகளுககு யாக₃ாதி₃கர்மங்களைச சொல்லுவதில் யோக₃ாபேக்ஷையில்லையே" என்னும பூர்வபக்ஷம இந்த ஸூத்ரததில் தளளபபடுகிறது. மநவாதிகளும யாக₃ாதி₃கர்மஙகளால ஆராதி₄க்கபபடும பரமாத்மாவைத தம யோகமஹிமையால ஸாக்ஷாத்கரித்தே அவனுககு ஆராதனமான தாமங்களைச் சொலலியிருக்கிறார்களாகையாலே, அவாகளுக்கும யோகாபேக்ஷையுண்டு. இபபடித் தம் யோகமஹிமையாலே இநதிரியஙகளுககு அப்பாறபட்ட பரமாதமாவையும் அவனுடைய ஆராதனங்

## ॥ योगप्रत्युक्त्यधिकरणम् ॥ (२-१-२)

सू ॥ एतेन योगः प्रत्युक्तः ॥ (२-१-३)

१६. कपिलोक्तेर्भ्रान्तिमूलकत्वेपि तदसंभवात् ।
वेदप्रवक्तृविध्युक्तयोगतन्त्रस्य, तेन वै ॥

१७. वेदोपबृंहणं न्याय्यमिति शङ्का निरस्यते ।
पू कृत्स्नवेदप्रवक्त्रैव योगस्याभिहितत्वतः ॥

---

களையும் ஸாக்ஷாத்கரித்தவர்களாய், வேதாந்தவிழுப்பொருளை அறிந்தவர்களில் சிறந்தவர்களாய், பலரான மனு முதலானோர், கபிலர் கூறிய ரீதியில் ப்ரதா₄னமே ஜகத்காரணமென்று ஸாக்ஷாத்கரிக்காமையாலே, கபிலஸ்ம்ருதியானது மயக்கத்தால் ஏற்பட்டது என்று நிச்சயித்து, வேதார்த்த நிர்ணயத்தில் விலக்கத்தக்கதேயாகும்.

ஸ்ம்ருத்யதி₄கரணம் முற்றிற்று

## யோக₃ப்ரத்யுக்த்யதிகரணம் (2-1-2)

### ஏதேந யோக₃: ப்ரத்யுக்த: ॥ 2-1-3 ॥

ஏதேந– (முன் ஸூத்ரத்தில்) கபிலஸ்ம்ருதியை நிரஸித்த வழியிலே, யோக₃ — யோக₃ஸ்ம்ருதியும், ப்ரத்யுக்த — பதிலுரைக்கப்பட்டதாயிற்று.

16–*17. முன் அதிகரணத்தில் கபிலரிஷி இயற்றிய ஸாங்க்ய ஸம்ருதியானது வேதவிருத்தமாகையாலே மயக்கத்தால் ஏற்பட்டது என்று நிரூபிக்கப்பட்டது "வேதங்களனைத்தையும் பலருக்கு ஓதுவித்த நான்முகனாலே இயற்றப்பெற்றதாகையாலே மயக்கத்திற்கு இடமில்லாததான யோக ஸ்ம்ருதியாலே வேதார்த்தத்தை விளக்குவது நியாயம்; அப்படி விளக்கும்போது ப்ரஹ்மம் உலகிற்கு நிமித்த காரண மாத்திரமாகவும், மூலப்ரக்ருதியே உலகிற்கு உபாதா₃நகாரணமாகவும் ஆகிறது என்பதே வேதா₃ர்த்த₂மென்றுதேறும்' என்னும் சங்கை இவ்வதிகரணத்தில் தள்ளப்படுகிறது.

१८. ईशाभ्युपगमाच्चापि योगस्मृत्याऽर्थनिर्णयः ।
न्याय्योऽतो वेदवाक्यानां प्रधानपरतेत्यसत् ॥

सि १९. कपिलोक्तेर्निरासेन योगतन्त्रं च वारितम् ।
कपिलस्मृतिवद्वेदविरुद्धत्वाविशेषतः ॥

---

*17*–18*.* பூர்வபக்ஷம்–ஸாங்க்யஸ்ம்ருதிபோலல்லாமல் எல்லா வேதங்களையும் முதலில் தான் ஓதிப் பிறர்க்கும் ஓது வித்தவனான பிரமனாலேயே யோகஸ்ம்ருதியானது இயற்றப் பெற்றது, மேலும், அதில் ஈஶ்வரனும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறான். வேதாந்தங்களில் மோக்ஷஸாதனமாகக் கூறப்பட்ட யோகமும் அதில் இசையப்படுகிறது ஆகையால், அதைக்கொண்டு அர்த்த நிர்ணயம் செய்வது நியாயமாகும். ஆகையால், அதிற் சொல்லியபடி ஈஶ்வரனை நிமித்தமாத்ர மாகவும், மூலப்ரக்ருதியையே உபாதானகாரணமாகவும் கொள்வதே தக்கது.

*18*-20* **ஸித்தாந்தம்.** கபிலஸ்ம்ருதியைத் தள்ளுவதற்குக் கூறியகாரணங்களே யோகஸ்ம்ருதி விஷயத்திலும் இருக்கின்றனவாகையாலே அதுவும் தள்ளத்தக்கதே. கபிலஸ்ம்ருதியைப்போலவே யோகஸ்ம்ருதியும் வேதத்திற்கு முரண்பட்ட அர்த்தங்களைச் சொல்லுகிறது. குறிப்பாக, உலகிற்கு நிமித்தோபாதான காரணங்கள் இரண்டாகவும் ஆகின்றவன் ஸர்வேஶ்வரனே என்று வேதங்கள் அறையாநிற்க, யோகஸ்ம்ருதியானது அவற்றுக்கு நேர்மாறாக ஈஶ்வரன் நிமித்தமாத்ரமாகிறான் என்று கூறுகிறது. ஆகையால் ஈஶ்வரனை ஒப்புக்கொண்டும், உள்ளபடி ஒப்புக்கொள்ளவில்லையாகையால் பயனில்லாமற்போகிறது. மோக்ஷஸாதனமான யோகத்தை ஒப்புக்கொண்டிருந்தபோதிலும், அந்த யோகத்துக்கு விஷயமான ப்ரஹ்மத்தை உலகிற்கு உபாதானமாக ஒப்புக்கொள்ளாமையாலும், ஜீவாத்மாவை ப்ரஹ்மாத்மகனாக

२०. अग्राह्या सर्वथा योगस्मृतिश्च भ्रान्तिहेतुका।
क्षेत्रज्ञत्वादिधर्वैक्तः भ्रमादिस्संभवेन्ननु ॥
॥इति योगप्रत्युक्त्यधिकरणम् ॥

॥ विलक्षणत्वाधिकरणम् ॥ (२-१-३)

सू-॥ न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात् ॥ (२-१-४)

२१. मन्वादिस्मृतयस्तर्कविरुद्धत्वात्सुदुर्बलाः।
तर्कानुसारिणी ग्राह्या कापिलीत्येतदस्यते ॥

---

ஒப்புகசொள்ளாமையாலும, யோகத்தைச் சொன்னதும் பயனற்றுப்போகிறது. நாலு வேதங்களையும சொன்னவனே யானாலும் பிரமனும இருள் துயககு மயககு மறபபுகளுக்கு வசப்பட்ட ஒரு ஜீவனே. அவனுககும் ரஜஸதமோ குணங கள் உணடு. முக்குணமயனுயிருபபதாலேயே, ஒவவொரு குணம் விஞ்சியிருக்கும ஒவ்வொரு காலததில ஒவ்வொரு விதமான புராணங்களை அவன உபதேசிததிருககிறுன என்று புராணங்களிலேயே சொலலபபடடிருப்பதைப் பாாககிறோம். அததகைய ராஜஸ தாமஸபுராணஙகளைப்போலவே இந்த யோகஸம்ருதியும வேதவிருததமாயிருககையாலே அந்த நான முகனின மயககததிலுலேயே ஏறபடடிருககவேண்டும. ஆகையால. கபிலஸம்ருதியைபபோலே யோகஸமருதியும எலலாபபடியாலும் கைவிடததக்கதேயாகும.

யோகபரதயுகதய$_4$திகரணம முற்றிற்று.

## விலக்ஷணத்வாதி$_4$கரணம். (2-1-3)

### ந விலக்ஷணத்வாத$_3$ஸ்ய தத$_2$ாத்வம் ச ஶப்$_3$த$_3$ாத்
### ॥2-1-4॥

**ந**—உலகம் ப்ரஹ்மத்தின் கார்யமாகமாட்டாது; அஸய **விலக்ஷணத்வாத்**— இவ்வுலகம் ப்ரஹ்மத்தைக்காட்டிலும

२२. ईशाद्विकारित्वाज्ञत्वाऽपुमर्थाश्रयतादिभिः।
विलक्षणत्वाज्जगतः न भवेत् ब्रह्मकार्यता॥

மிகவும வேறுபட்டிருக்கையால்; தத்₂ாதவம்-- இப்படி வேறு பட்டிருப்பது, ஶப்₃த்₃ாத் ச— சாஸ்திரப்ரமாணத்தாலும் அறியப்படுகிறது.

21.* இவ்வதிகரணத்தில் ப்ரதா₄னகாரணவாதி₃ தர்க்கத்தை பலமாகக்கொண்டு ஆக்ஷேபிக்கிறான் "மநு முதலான ஸ்மருதிகள் தாக்கத்திறகு முரண்பட்டவையாகையாலே, மிகவும வலிமையற்றவையாகும. ஆகையால தர்க்கத்தோடு ஒத்திருக்கும் கபிலஸம்ருதியே கைக்கொள்ளத்தக்கது' என்பது அவன வாதம. இவ்வாதம இவ்வதிகரணத்தில தள்ளப்படுகிறது. இதில முதல இரணடு ஸூத்ரங்களும பூர்வபக்ஷம.

22–23 பூர்வபக்ஷம. ப்ரஹ்மத்துககு உலகம் கார்யம (உபாதே₃யம்)என்று கூறுவது தவறு பரஹ்மத்தைக்காட்டிலும் மிகவும வேறுபட்ட இவ்வுலகம் அதற்குக் கார்யமாக மாட்டாதன்றோ. இவ்வுலகம் விகாரமுடையது, ப்ரஹ்மமோ விகாரமற்றது எனக்கூறப்படுகிறது. இவ்வுலகம் அறிவற்றது; ப்ரஹ்மம் எல்லாமறிந்ததெனச் சொலலபபடுகிறது. இவ்வுலகம் அபுருஷார்த்தமான துக்கம் முதலானவற்றுககு இருப்பிடமாயிருபபது. பரஹமமோ பரமபுருஷார்த்தமான ஆனந்தத்துககு ஒரே இருபபிடமாயிருப்பது என்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. இத்தகைய பல வேறுபாடுகளிருப்பதால உலகம் பரஹ்மததிற்குக கார்யமாயிருக்க முடியாது உலகில மண் முதலான (உபாதா₃ன) காரணங்களும, பானை முதலிய கார்யஙகளும் (உபாதே₃யங்களும்) வேறுபாடின்றி ஒரே லக்ஷணமுடையவையாயிருப்பதைக் காண்கிறோம். அதாவது, பானையும உண்மையில மண்ணுருவாகவேயிருப்பதைக் காண்கிறோம். இங்கோவெனில் ப்ரஹ்மம் அறிவுள்ளதாய், ஆநந்தத்திற்கேயிருப்பிடமானதாயிருப்பது; சேதனா

२३. वैलक्षण्यं च "विज्ञानञ्चे"ति वेदात्प्रतीयते।
अतो जगत्कारणं तत् प्रधानं स्यात्सलक्षणम्॥
२४. "तं पृथिव्यब्रवीत्, आप" इत्यादिश्रुतिवाक्यतः।
पृथिव्यादेरपि स्पष्टं ज्ञानयोगोऽवसीयते॥
२५. तस्मान्न जगतो ब्रह्मवैलक்षण्यं भवेदिति।
आक्षेपपरिहाराय पठ्यते सूत्रमुत्तरम्॥

---

சேதநாத்மகமான உலகம் தக்கத்துக்கு இருப்பிடமானதாயும் அறிவற்றதாகவுமிருக்கிறது ஆகையால உலகம பரஹ்மத்திறகுக் கார்யமாகமுடியாது. உலகம பரஹ்மத்தைககாட்டிலும மிகவும் வேறுபட்டிருக்கிறது எனனும இவ்விஷயம ப்ரத்யக்ஷத்தாலும், அனுமானததாலும அறியப்படுவதோடன்றியில், சாஸ்திரததாலும அறியப்படுகிறது "விஜ்ஞாநஞ்ச அவிஜ்ஞாநஞ்ச" [தைத்த-ஆந-3] [அறிவுள்ளதான ப்ரஹ்மமும், அறிவற்றதான உலகமும] முதலான ஶ்ருதிகளும் இவ் வேறுபாட்டையே காட்டுகின்றன. ஆகையால உலகத்தோடு வேறுபாடின்றி ஒரே லக்ஷணமுடைய மூல ப்ரக்ருதியே ஜகத்காரணமாயிருக்கத்தக்கது.

24-*25. பூர்வபக்ஷத்தின்மேல் ஓராக்ஷேபம். பரஹ்மத்தைககாட்டிலும உலகம் விலக்ஷணமானபடியால உலகிறகு ப்ரஹ்மம காரணமாகமாட்டாது என்று கூறியது தவறு. "தம் ப்ருதி₂வ்யப₃ரவீத" [யஜு-கா 5-5 2] [அவனைக் குறித்து பூமி சொல்லிற்று] · ஆபோ வா அகாமயந்த" [யஜு-அஷ்டகம3-1-5][ஜலஙகள் ஸங்கல்பித்தன]முதலான வேதவாக்கியங்களிலிருந்து பூமி, ஜலம முதலான பொருள்களுக்கும் அறிவுண்டென விளங்குகிறது. ஆகையால அறிவுள்ள உலகம் அறிவுள்ளபரஹ்மத்தைககாட்டிலும் விலக்ஷணமானதல்லவாகையால் உலகம் பரஹ்மத்தின் காரயமாகத் தட்டில்லையே.

---

25* [இவ்வாக்ஷேபத்திறகு பதிலாக அடுத்த ஸூத்ரம அமைகிறது]

* पू-सू-॥ अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम् ॥ (२-१-५)

२६. धीकार्यव्यपदेशोऽयं "तं पृथिव्यब्रवीदि"ति ।
तत्तत्पदार्थाभिमानिदेवताविषयो मतः ॥

२७. "हन्ताह"मिति पृथ्व्यादेर्देवतेति विशेषणात् ।
"अग्निर्वाग्भि"ति वागादावग्न्यादेश्चानुवेशनात् ॥

---

(*பூ. ஸூ:—)

**அபி₄மாநிவ்யபதே₃ஶஸ்து விஶேஷாநுக₃திப்₄யாம் ॥2-1-5॥**

**அபி₄மாநிவ்யபதே₃ஶ** **து**–(*'பூமி சொல்லிற்று' முதலான விடங்களில் பூமி முதலானவற்றின்) அபி₄மானிதேவதை களையே சொல்லுகிறது;* **விஶேஷாநுக₃திப்₄யாம்**— *(பூமி முதலானவற்றை தே₃வ தாஶப்தத்தாலே) விசேஷித்திருக்கை யாலும் (அக்னி முதலானவை வாக்கு முதலானவற்றை) அநுப்ரவேஶிப்பதாகக் கூறுகையாலும்* **(இது தெளிவாகிறது.)**

*26-28.* **பூர்வபக்ஷம்.** *முற்கூறிய* **ஆக்ஷேபம்** *பொருந்தாது.* **" தம் ப்ருதி₂வ்யப்₃ரவீத் "** *[யஜு—கா 5-5-2] (அவனைக் குறித்து பூமி சொல்லிற்று) முதலான* **ஶ்ருதிவாக்யங்களில்** *பூமி முதலானவற்றுக்கு அறிவின் காரியமான பேச்சு முதலான வற்றைச் சொல்லியிருப்பது பூமி முதலான அவ்வவற்றின அபி₄மானி தேவதைகளின் பேச்சு முதலானவற்றையே குறிக்கிறது.* **வேறு வேதவாக்கியங்களில் இந்த பூமி முதலான வற்றை தேவதைகள் என்று விசேஷித்திருப்பதிலிருந்தும், இவற்றுக்கு அநுப்ரவேஶத்தைச் சொல்லியிருப்பதிலிருந்தும் இவ்விஷயம் தெளிவாகிறது. "ஹந்தா஽ஹமிமாஸ் திஸ்ரோ தே₃வதா . அநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி"** *[சாந்*

---

***இனி. பூர்வபக்ஷஸூத்ரங்கள் (பூ-ஸூ-பூ.ஸூ) என்றும். ஸித்தாந்தஸூத்ரங்கள்(ஸி-ஸூ-ஸி.ஸூ)என்றும்குறிக்கப்படும்**

२८. ब्रह्मसालक्षण्यमस्य जगतोऽतो न विद्यते।
प्रधानोपादानकत्वमतोऽस्त्वागमसंमतम् ॥
सि-सू-॥ दृश्यते तु॥ (२-१-६)
२९. अत्रोच्यते माक्षिकादेः क्रिम्याद्युत्पत्तिदर्शनात्।
कार्यकारणभावोऽस्ति सुविलक्षणयोरपि ॥

---

6-3-2] [அகனி, ஜலம, பூமி என்னும இம மூனறு தேவதைகளையும்.. .... அநுப்ரவேஶித்து நாமரூபவ்யாகரணம செய்யக கடவேன்.] என்று பூமி முதலானவற்றை தேவதைகளாக ஓருபனிஷத் வாகயம படிககிறது. 'அக₃நிா வாக₃பூ₄தவா முக₂ம் பராவிஶத்'' [ஐதரேய 2-4] [அகனியானது வாககாகி முகத்தினுள் நுழைநதது.] என்று மற்றொரு வேதவாககியம அக்னி முதலானவற்றுக்கு வாக்கு முதலான இநதிரியஙகளில அநுப்ரவேஶததைச் சொலலுகிறது. இப்படி தேவதைகளாக விஶேஷித்திருககையாலும், அநுபரவேஶததைச் சொலலியிருககையாலும பூமி, அகனி முதலான வேத சப்தங்கள பூமி, அக்னி முதலான சபதங்களால உலகில வழஙகபபடும அசேதனப் பொருள்களின அபி₄மானி தேவதைகளையே குறிக்கின்றன என விளங்குகிறது. ஆகையால பூமி முதலானவற்றுக்கும் அறிவுண்டாகையால, அறிவுள்ள உலகம அறிவுள்ள ப்ரஹ்மத்தைக்காட்டிலும் விலக்ஷணமானதலலவாகையால உலகம் ப்ரஹ்மத்தின் கார்யமாகத தட்டிலலை எனற ஆக்ஷேபம் பொருந்தாது. ஆகையால் முற்கூறியபடி ப்ரஹமத்தைக்காட்டிலும் உலகம விலக்ஷணமாகவேயிருககையால கபிலஸ்ம்ருதியில் சொல்லியபடி மூலபரகருதியே உலகிறகு உபாதான காரணமாகும்.

**(ஸி. ஸூ:-) த்₃ருஶ்யதே து ॥2-1-6॥**

**த்₃ருஶ்யதே து**—(ஈ முதலானவற்றிலிருந்து அவற்றிலும் மிகவும் வேறுவகைப்பட்ட புழு முதலானவை உணடாவது) காணபபடுகிறது; (ஆகையால பரஹ்மததிடமிருந்து மிகவும் வேறுவகைப்பட்ட உலகம உணடாவதில குறையிலலை.)

सि-सू-॥ असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात् ॥ (२-१-७)

३०. कारणात् यदि कार्यस्य वैलक्षण्यमिहेष्यते ।
कारणे तर्हि कार्यं न सदित्यसत उद्भवः ॥

---

29. ஸித்தாந்தம்-முன் இரண்டு ஸூத்ரங்களிலும் எழுந்த பூர்வபக்ஷம் தவறு, ஈ முதலானவற்றிலிருந்து மிக வும் வேறு வகைப்பட்ட புழு முதலானவை உண்டாவதைக் காண்கிறோமாகையால், பரஹ்மத்திடமிருந்து மிகவும் வேறு வகைப்பட்டதாக ஒப்புக்கொண்டாலும் * உலகம் உண்டா வதில் குறையில்லை.

**(ஸி. ஸூ:-) அஸதிதி சேந்ந ப்ரதிஷேத₄மாத்ரத்வாத் ॥2-1-7॥**

**அஸத இதி சேத்**—(முற்கூறியபடி ஒப்புக்கொண்டால் கார்யம் காரணத்தில்) இல்லாமற் போகிறதே எனில். **ந**— இல்லாமற் போகாது; **ப்ரதிஷேத₄ மாத்ரத்வாத**—(கார்ய காரணங்கள்) ஒரே மாதிரியாயிருக்கவேண்டும் என்னும் நியமத்தை மாத்திரமே தள்ளுகிறோம், (கார்ய காரணங்கள் ஒரே வஸ்துவென்பதையும் தள்ளவில்லை.)

30-*31- **பூர்வபக்ஷம்.** முன் ஸூத்ரத்தில் சொன்னபடி காரணத்தைக்காட்டிலும் கார்யம் மிகவும் வேறுபட்டது என்று ஒப்புக்கொண்டால், காரணத்தில் கார்யப்பொருள் இல்லையென்று ஆகிவிடுமே, அப்படியானால் இல்லாதபொருள் புதிதாக உண்டாகிறது என்று கூறும் அஸத்கார்யவாதத்தை ஒப்புக்கொண்டதாகிவிடுமே, இது எப்படிப் பொருந்தும்?

---

* உண்மையில் ஜக₃த் விஶிஷ்டபரஹ்மத்தையே காரணமாகவும், கார்யமாகவும் ஒப்புக்கொள்ளுகையால் இங்கு கார்ய காரணங்களிடையே ஸாலக்ஷண்யமுள்ளதேயொழிய வைலக்ஷண்யமில்லையென்பதே ஸித்தாந்தியின் கருத்து. இது மேலே தெளிவு பெறும்.

३१. प्रसजेदिति चेत्तन्न कार्यकारणयोर्मिथः।
सलक्षणत्वनियममात्रस्य प्रतिषेधतः॥

३२. तयोरेकद्रव्यता तु स्वीकृतैवैकमेव तत्।
कारणं कार्यतां प्राप्तं सलक्षणविलक्षणे॥

३३. अवस्थे भजते तस्मात् नियमोऽत्र न विद्यते।
अतोऽत्र वैलक्षण्येऽपि ब्रह्मकारणकं जगत्॥

पू-सू-॥ अपीतौ तद्वत्प्रसङ्गादसमञ्जसम्॥ (२-१-८)

---

*31-33-ஸித்தாந்தம்- இவ்வாக்ஷேபம் எழ இடமில்லை. முன் ஸூத்ரத்தில், கார்யமும் காரணமும் ஒரே லக்ஷணத்தையுடையதாயிருக்கவேண்டும் என்னும் நியமமே தள்ளப்பட்டது, கார்ய காரணங்கள் ஒரே திரவியமே என்பது தள்ளப்படவில்லை, ஒப்புக்கொள்ளப்பட்டேயுள்ளது. ஒன்றேயான காரணமே கார்ய நிலையை அடைகிறது, மண்ணிலிருந்து குடமுண்டாகுமிடத்திற்போலே சில சமயம் கார்ய காரணங்கள் ஒரே லக்ஷணமுடையவையாகவுமிருக்கின்றன; ஈயிலிருந்து புழுவுண்டாகுமிடத்திற்போலே சில சமயம் அவை வெவ்வேறு லக்ஷணங்களையுடையவையாகவுமிருக்கின்றன. இதில் ஒரு நிர்பந்தமில்லை காரணமானது ஸலக்ஷணமாகவோ, விலக்ஷணமாகவோவுள்ள கார்யநிலையை அடையும் இவ்விரண்டிடங்களிலும் கார்ய காரணங்கள் ஒரே திரவியமே என்பது மறுக்கப்படவில்லை. த$_3$ார்ஷ்டாந்திகமான ஜகத் ப்ரஹ்மங்கள் விஷயத்திலும் உலகமும் ப்ரஹ்மமுமாகிற கார்ய காரணங்கள் ஒரே திரவியமே என்னும் நியமத்திற்கு ப$_4$ங்க$_3$மில்லை; ஆகையால், ஜகத் ப்ரஹ்மங்கள் வேறுபட்ட லக்ஷணங்களையுடையவையென ஒப்புக்கொண்டாலும் அவை கார்ய காரணமாகக் குறையில்லை.

**(பூ.ஸூ:-) அபீதௌ தத்$_3$வத்ப்ரஸங்க$_3$ாத$_3$ஸமஞ்ஜஸம்**
**||2-1-8||**

३४. जगतः कारणे ब्रह्मण्यपीत्यादौ परात्मनः।
जगद्वच्च विकारित्वाद्यनिष्टः प्रसजेत्ततः॥
३५. भवेद्वेदान्तवाक्यानामसमञ्जसतेति चेत्।
सि-सू-न तु दृष्टान्तभावात्॥ (२-१-९)
नैतद्युक्तं ब्रह्मणोऽस्य चिदचिद्वस्तुदेहिनः॥

---

**அபீதௌ**—ப்ரளயத்தில், **தத்₃வத் ப்ரஸங்கா₃த்**—உலகைப் போலவே (பரமாத்மாவுக்கும் விகாரமடைகை முதலான தோஷங்கள்) ஏற்படுமாகையால், **அஸமஞ்ஜஸம்**—(வேதாந்த வாக்யங்கள்) பொருந்தாப் பேச்சுகளாகிவிடும்.

*34–*35.* **பூர்வபக்ஷம்.** ஸூத்ரத்தில் அபீதி என்று அப்யயமாகிற லயத்தைச் சொன்னது ஸ்ருஷ்டிஸ்திதிகளுக்கு உபலக்ஷணம். முன் ஸூத்ரத்தில் சொன்னபடி காரணமான ப்ரஹ்மமும், கார்யமான உலகமும் ஒரே த்ரவ்யம் என்று கொண்டால், ப்ரளயகாலம் முதலானவற்றில் கார்யமான உலகமே காரணமான ப்ரஹ்மமாகிவிடுவதால், கார்யமான கடத்திலிருக்கும் மண்ணாயிருக்கும் தன்மை முதலானவை காரணமான மண்கட்டியிலும் இருப்பதுபோலே, கார்யமான சேதநாசேதநாத்மகமான உலகத்திலுள்ள விகாரமடைவதாயிருக்கை, அறிவற்றதாயிருக்கை, கர்மத்திற்கு வசப்படுவதாயிருக்கை முதலான தன்மைகள் காரணமான ப்ரஹ்மத்திடமும் ஏற்பட வேண்டிவரும். வேதாந்தவாக்யங்களோவெனில், இந்த விகாரித்வம் முதலான தன்மைகள் ப்ரஹ்மத்திடமில்லையென்று பேசுகின்றன. ஆகவிப்படி முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகையால் வேதாந்த வாக்யங்கள் முழுவதும் பொருந்தாப் பேச்சுகள் ஆகிவிடும். இப்படியாகாமைக்காக ஜகத்ப்ரஹ்மங்கள் ஒரே த்ரவ்யமல்ல என்று கொண்டே தீரவேண்டும். ஆகையால் ப்ரஹ்மம் உலகிற்கு உபாதானகாரணமாக முடியாது. மூலப்ரக்ருதியே உலகிற்கு உபாதானகாரணமாகும்.

३६. कार्यकारणभावे चासंस्पर्शे गुणदोषयोः।
निदर्शनस्य सद्भावात् यथा जीवस्य देहिनः॥

३७. बाल्ययौवनवृद्धत्वधर्मास्सन्त्येव विग्रहे।
आत्मन्येव ज्ञानसुखादीनि तद्वत्परात्मनः॥

३८. शरीरभूतचिदचिद्गता दोषा अधीमुखाः।
सार्वज्ञ्यसत्यसङ्कल्पतादयश्च परात्मनि॥

---

**(ஸ்ரீ. ஸூ:-) ந து த்₃ருஷ்டாந்தப₄வாத் ॥2-1-9॥**

ந து-(ப்ரஹ்மத்திடம் உலகிலுள்ள தோஷங்கள் ஏற்படாவாகையால்.) வேதாந்தவாக்யங்கள் பொருந்தாபபேச சாகமாட்டா, த்₃ருஷ்டாந்தப₄வாத்-த்ருஷ்டாந்தமிருக்கையால்.

35*–38. ஸித்தாந்தம்–இப்பூர்வபக்ஷம் தவறு. கேவல ப₃ரஹ்மஸ்வரூபம் உலகமாகப் பரிணமிப்பதாக நாம் ஒப்புக்கொள்ளவில்லை, காரணநிலையில் ஸூக்ஷ்மசேதநாசேதனங்களோடு கூடியிருந்த ப்ரஹ்மமே, கார்ய நிலையில் ஸ்தூல சேதநாசேதனங்களோடு கூடியதாகப் பரிணமிப்பதாகவே ஒப்புக்கொள்ளுகிறோம். சேதநாசேதநப்பொருள்களை சரீரமாகக்கொண்ட ப்ரஹ்மமானது கார்யமாகவும் காரணமாகவுமானபோதிலும் சரீரமான சேதநாசேதனங்களிலுள்ள தோஷங்கள் பரஹ்மத்திடம் ஒட்டமாட்டா என்பதற்கும், சரீரியான பரஹ்மத்திடமுள்ள குணங்கள் சரீரமான சேதநாசேதனங்களிடம் ஒட்டமாட்டா என்பதற்கும் திருஷ்டாந்தம் உள்ளது. அதாவது –பராக்ருத சரீரமுடைய ஜீவனுக்கு ப₃ால்யம், யௌவனம், கிழத்தனம் முதலான நிலைகள் ஏற்பட்டபோதிலும் பாலயம் முதலான தன்மைகள் சரீரத்திலேயே நிற்பதையும், ஜ்ஞானம் ஸுக₂ம் முதலான தன்மைகள் ஆத்மாவிலேயே நிற்பதையும் காணகிறோம். அதுபோலவே பரமாத்மாவின் சரீரமான சேதநாசேதனங்களிடமே அஜ்ஞானம் முதலான தோஷங்கள் நிலைநிற்கின்றன

सि-सू-॥ स्वपक्षदोषाच्च ॥ (२-१-१०)

३९. ब्रह्मकारणवादस्य संग्रहोऽस्य न केवलम्।
निर्दुष्टत्वात्, प्रधानस्य हेतुत्वे दोषतोऽपि हि॥

४०. प्रधानहेतुवादे हि पुंसो निर्विकृतेस्सदा।
अजासान्निध्यतोऽन्योन्यं धर्माध्यासो न संभवेत्॥

४१. अध्यासो ह्यन्यधर्मानुसन्धानं स्यादन्यवस्तुनि।
निर्विकारस्य सोऽध्यासो न भवेच्चितो भृशम्॥

---

வென்றும், ஸார்வஜ்ஞத்வம், ஸத்யஸங்கல்பத்வம் முதலான குணங்கள் சரீரியான பரமாத்மாவிடமே நிலை நிற்கின்றன வென்றும் கொள்ளத் தடையில்லை. ஆகவிப்படி ப்ரஹ்மத்திடம் உலகிலுள்ள தோஷங்கள் தட்டாவாகையாலே விசிஷ்ட ப்ரஹ்மமே உபாதான காரணமாகத் தட்டில்லை.

**(ஸி-ஸூ:-) ஸ்வபக்ஷதோ$_3$ஷாச்ச ||2-1-10||**

**ஸ்வபக்ஷதோ$_3$ஷாத் ச**— ஸாங்க$_2$ய பக்ஷத்தில் தோஷ மிருக்கையாலும் (ப்ரஹ்மகாரணவாதமே கைக்கொள்ளத் தக்கது.)

39–42—**ஸித்தாந்தம்.** ப்ரஹ்மகாரணவாதத்தில் தோஷ மில்லையாகையாலே அதுவே கைக்கொள்ளத்தக்கது என்று இது வரையில் நிலைநிறுத்தப்பட்டது, ப்ரத$_4$ாநகாரண வாதத்தில் தோஷமிருக்கையாலும் அதைக்கைவிட்டு ப்$_3$ரஹ்ம காரணவாதமே கைக்கொள்ளத்தக்கது என்று இந்த ஸூத்ரத்தில் ஸ்தாபிக்கப்படுகிறது. ப்ரத$_4$ானகாரணவாதிகளான ஸாங்க்யர்கள், விகாரமற்றவனான புருஷனுக்கும், மூலப்ரக்ருதிக்கும் ஏற்படும் ஸந்நிதி$_4$யாலே (நெருக்கத்தாலே) ப்ரக்ருதியிலுள்ள கர்த்ருத்வம் புருஷனிடமும் புருஷனுகிற சைதந்யம் ப்ரக்ருதியிலும் அத$_4$யஸிக்கப்படுவதாக (ஏறிடப் படுவதாக) கொள்ளுகிறார்கள். இது ஒட்டாது. அத்$_4$யாஸ மாவது—ஒரு பொருளில் வேறு பொருளின் தன்மையை அநுஸந்திப்பதேயாகும்; விகாரமற்றவனான புருஷனுக்கு

४२. प्रकृतेरिति तन्मूलविश्वकार्याद्यसंभवः ।
तस्मादत्यन्तदुष्टत्वात् न तत्पक्षपरिग्रहः ॥
सि-सू-॥ तर्काप्रतिष्ठानादपि ॥ (२-१-११)
४३. अस्याप्रतिष्ठितत्वाच्च तर्कस्यान्यहतस्य च ।
एतन्मूलस्तन्त्रवादः त्याज्यः प्रामाणिकैर्भृशम् ॥

---

*அததகைய அநுஸநதானம எனபது ஓடடாதாகையால அத$_4$யாஸம் ஓடடாது. அறிவறறதாகையால மூலபரககருதிககு அவ்வநுஸநத$_4$ானம அடியோடு ஓடடாது. ஆகையால இவ் வத$_4$யாஸத்தை அடியாககொணட ஜக$_3$த்ஸருஷ்டி முதலான பரவ்ருததிகள சிறிதும பொருநதமாடடா ஆகவிபபடி ஸாங்க்யபக்ஷம மிகவும பொருநதாமலிருககையால அதைக கைவிடடு பரஹ்மகாரணவாததைதயே கைககொள்ள வேணடும.*

## (ஸி-ஸூ) தர்க்காப்ரதிஷ்ட$_2$ாநாத$_3$பி ॥2-1-11॥

**தாககாபரதிஷ்ட$_2$ாநாத அபி**—*தாககம ஒரு நிலையில நில லாததாகையாலும* (**ஶ**ருதியிலிருநது தேறும ப$_3$ரஹமகாரண வாதமே கைககொள்ளததககது.)

*43.* **ஸித்தாந்தம**—*ஒரு தர்ககம மறறொரு தாககத்தால அடிபபட்டுப போவதை நாம உலகில காணகிறோமாகையால, கேவலதாககத்தை அடிபபடையாககொணட ஸாஙக்$_2$ய மதம கைவிடததக்கதேயாகும, தர்ககததைத துணையாகக் கொண்ட வேதத்தை ஆதாரமாககொண்ட பரஹ்மகாரண வாதமே கைக்கொள்ளத்தககதாகும.*

**"ஆர்ஷம் த$_4$ாமோபதே$_3$ஶம் ச வேத$_3$ஶாஸதராவிரோதி$_4$நா ।
யஸ தாககேணாநுஸநத$_4$ததே ஸ த$_4$ர்மம வேத$_3$ நேதர ॥"**

*[மநு 12-106]*

*[**ஶ**ருதிஸமருதிகளை **அவறறுககு முரணபடாத தாககததைக கொண்டு** பொருள் கொளபவனே தாமமறிநதவன, மறற **வ**ன அறியாதவன] என று கூறிஞரனரே மனுவும.*

सि-सू-।। अन्यथानुमेयमिति चेदेवमप्यनिर्मोक्षप्रसङ्गः ।। (२-१-१२)

४४. क्लृप्तप्रकारादितरप्रकारेणानुमानिकम्।
अनुमेयं तदिति चेत् एवमप्युक्तदोषतः।।

४५. अनिर्मोक्षप्रसङ्गश्च दुर्वारो भवति ध्रुवम्।
त्वदुक्ततर्कादधिककुतर्कस्यापि संभवात्।।

।। इति विलक्षणत्वाधिकरणम्।।

**(ஸி-ஸூ) அந்யதா₂ऽநுமேயமிதி சேதே₃வமப்யநிர்மோக்ஷ ப்ரஸங்க₃:** ||2-1-12||

அந்யதா₂—வேறுவிதமாக. அநுமேயம்–(பரத₄ானதனை ஜகத்காரணமாக) அநுமானம் செய்யவேண்டியது. இதி சேத—எனில்; ஏவம் அபி—இப்படி அநுமானம் செய்தாலும். அநிர்மோக்ஷப்ரஸங்க₃:—('தர்க்கம் ஒருநிலைநில்லாது' என்று சென்ற ஸூத்ரத்திற்சொன்ன தோஷத்தினின்றும்) விடுபட முடியாமற்போகும்.

*44-44*–பூர்வபக்ஷம்—இதுவரையில் மூலப்ரக்ருதியை ஜகத்காரணமாக ஸ்தாபிக்கக் கையாண்ட அநுமானங்கள் நிலைநில்லாமற்போனாலும், மேதா₄விலாஸத்தாலே நிலைநிற்கும் அநுமானத்தை வேறுவழியிலே கண்டுபிடித்து, அதன் மூலம் பரத₄ானமே ஜகத்காரணம் என்று நிலைநிறுத்தலாமாகையாலே, தர்க்கத்தை அடிப்படையாகக்கொண்ட ஸாங்க்ய மதம் கைகொள்ளத்தக்கதே என்று நிச்சயிக்கத்தட்டில்லை

44*-45—ஸித்தாந்தம்—இப்பூர்வபக்ஷம் தவறு. இப்படிச் சொன்னபடி வேறுவழியில் ஒரு அநுமானத்தைக்கண்டு பிடித்தாலும், இப்பூர்வபக்ஷியைக்காட்டிலும் குதர்க்கத்தில் வல்லவனான ஒருவன் தோன்றி இந்தத்தர்க்கத்தையும் நிலைநில்லாமற் செய்யக்கூடுமாகையால், 'தர்க்கம் நிலைநில்லாது' என்று சென்ற ஸூத்ரத்தில் சொன்ன தோஷத்தினின்றும் விடுபடமுடியாமற்போய்விடும் என்பது நிச்சயமாகையால், கேவல தர்க்கத்தை அடிப்படையாகக்கொண்ட பரத₄ான காரணவாத₃ம் கைவிடத்தக்கதேயாகும்.

**விலக்ஷணத்வாதிகரணம் முற்றிற்று.**

॥ शिष्टापरिग्रहाधिकरणम् ॥ (२-१-४)

सि-सू-॥ एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याताः ॥ (२-१-१३)

४६. ब्रह्मकारणतावादोऽचाल्योप्यस्थिरतर्कतः ।
अणुकारणतर्कैस्स चाल्य इत्येतदस्यते ॥

## சிஷ்டாபரிக்₃ரஹாதி₄கரணம் (2-1-4)

**(ஸி-ஸூ)ஏதேந ஶிஷ்டாபரிக்₃ரஹா அபி வ்யாக்₂யாதா ॥2-1-13॥**

ஏதேந—இவ்வளவால. **ஶிஷ்டாபரிக₃ரஹா. அபி**–வேதத திலுல ஆதரிககபபடாத (நையாயிகம முதலான) மறற (பரமாணுகாரணவாத)பக்ஷஙகளும. **வயாக₂யாதா.**–தள்ளப பட்டன எனறு அறியததககது.

*46-46*—பூர்வபக்ஷம-முறகூறியபடி ப்ரத₄ானகாரண வாதியின நிலைநிலலாத தாககஙகளால ப்ரஹ்மகாரணவாதம அசைகக முடியாமற்போனுலும். பரமாணுகாரணவாதி களின நிலைநிறகும் தாககஙகளாலே அதை அசைககலாமே. ப்ரத₄ானகாரணவாதமபோலே பரமாணுகாரணவாததநை ஒரு மதததைச சோநதவர்களே நிலைநிறுத்தவிலலை, நையா யிகா. வைசேஷிகா. சமணர். சைவர் முதலான பல மதங களைச் சோந்தவாகள் தஙகள் தங்களுடைய தர்ககஙகளைக கொணடு பரமாணுவே உபாதான காரணம் என்னும ஒரே முடிவுககு வந்திருககிருர்கள். ஆகையால பரமாணுகாரண வாதவிஷயத்தில 'தர்ககம நிலைநிலலாது' எனனும தோஷம ஏறபடவழியிலலை. ஆகையால பரமாணுகாரணவாதமே கைககொள்ளததக்கது.

46*-48. **ஸித்தாநதம்**—இபபூாவபக்ஷம தவறு. வேதத் திலுல ஆதரிககப்படாத ஸாங்க்யமதத்தை நிரஸிதத கார ணங்களாலேயே. வேதத்திலுல ஆதரிககபபடாத நையா

४७. साङ्ख्यतन्त्रनिरासेन शिष्टा वेदापरिग्रहाः।
निरस्ताः कणभक्षादिस्मृतयश्चाप्रतिष्ठिताः॥

४८. शङ्काऽधिकाऽणुवादस्य न दुष्टत्वं बहुग्रहात्।
निस्तारस्तर्कमूलत्वादस्याप्यस्थिरतेति च॥

॥ इति शिष्टापरिग्रहाधिकरणम्॥

---

பிகம முதலான பரமாணுகாரணவாத பக்ஷங்களும தளளப படடவையாகின்றன. கணாதர், அக்ஷபாதர், சமணர், சைவர் முதலான பல மதங்களைச் சேர்ந்தவர்கள தங்கள் தங்கள் தர்க்கங்களாலே பரமாணுவே ஜகத்காரணம என்று நிலைநிறுத்தியிருக்கிறார்களாகையாலே,'தர்க்கம நிலைநில்லாது' என்னும தோஷம வாராது என்று அதிகப்படியான ஆசங்கையை (ஸந்தேஹத்தை) எழுப்பியதற்குப பரிஹாரமாவது,- பலர் பலதர்க்கங்களாலே பரமாணுகாரணவாதத்தைச் செய்திருந்தபோதிலும, அந்தத்தர்க்கங்களும் வேறுதர்க்கங்களாலே முறகூறிய வழியிலஅடிபட்டுபபோகலாமாகையாலே, அந்தத்தர்க்கங்களும நிலைநில்லாமறபோக இடமுண்டு. மேலும, நையாயிகர் முதலானோர் 'பரமாணு ஜகத்காரணம' என்னும் ஒரு விஷயத்தில ஏகக்கண்டராயிருந்தபோதிலும பரமாணுவின ஸ்வரூபம எத்தகையது என்று நிர்ணயிபபதில அவர்களுடைய தர்க்கங்கள் நிலைநில்லாமலிருப்பதையே காண்கிறோம. பரமாணுவைச் சிலர் சூந்யமெனகின்றனர், வேறு சிலர் சூர்யமனறெனகின்றனர். சிலர் அது ஜ்ஞான ஸ்வரூபமெனகின்றனர், பிறிது சிலர் அர்த்தஸ்வரூபமென்கின்றனர். சிலர் அது க்ஷணிகமெனகின்றனர்: மற்றும சிலர் அது நித்யமெனகின்றனர் சிலர் அது ஒருபடிபபட்டதெனகின்றனர், இன்னும் சிலர் அது பலபடிபபட்டது என கின்றனர். சிலர் அது மெய்யெனக கூறுகின்றனர்; மற்றவர் அதைப பொய்யெனக கூறுகின்றனர். இவ்வண்ணமாகப் பரமாணுஸ்வரூபவிஷயத்தில அவர்களுடைய தர்க்கங்

## ॥ भोक्त्रापत्त्यधिकरणम् ॥ (२-१-५)

सि-सू-॥ भोक्त्रापत्तेरविभागश्चेत्स्याल्लोकवत् ॥ (२-१-१४)

கள் நிலைநிலலாமறபோவதைக காணகிறோமாகையாலும், ஸாஙகயமதமபோலே பரமாணுகாரணவாதமும வேததநில் ஆதரிககபபடாததாகையாலும, கேவலதாககததையே அடிப படையாகக கொணடதாகையாலும ஸாங்கயமதத்தை நிர ஸிததவழியிலேயே இமமதஙகளும தளளபபடடவையாக அறியததககவை. ஆகையால, சிஷ்டஙகளாய—முன நிர ஸிககபபடட ஸாங்கயமததைககாட்டிலும வேறுபடடவை யாய், அபரிக₃ரஹஙகளான—( ஸாஙகயத்தைபபோலவே ) வேதவைதிகாகளால பரிக₃ரஹிககப்படாத பரமாணுகாரண வாததனதச செய்யும மதஙகளும முன் சொனன 'தர்ககம நிலைநிலலாது முதலான காரணஙகளாலேயே நிரஸிககப பட்டன.

ஶிஷ்டாபரிக₃ரஹாதி₄கரணம் முற்றிற்று

## போக்த்ராபத்த்யதிகரணம் (2-1-5)

### (ஸி-ஸூ) போ₄க்த்ராபத்தேரவிப₄ாக₃ஶ்சேத் ஸ்யால்லோகவத் ॥2-1-14॥

**போ₄ாகதராபத்தே** — (பரஹ்மம சேதநாசேதனங்களை சரீரமாகக் கொண்டதென்று இசைநதால, சரீரமுடைய ஜீவனைப்போலே, சரீரமுடைய பரஹ்மமும) ஸுகது₃ககா நுப₄வமுடையது என்று ஆகிவிடுமாகையால, **அவிப₄ாக₃ சேத**-(ஜீவனுக்கும் ப்ரஹ்மததிற்கும்) வாசியிலலாமறபோய் விடுமே எனில்: **லோகவத ஸயாத**—உலகில (அரசன பிரஜை ஆகிய இருவருமசரீரமுடையவராயிருநதபோதிலும், அரச னின் ஆணையை மீறுவதால ஏறபடும துககாநுபவம் பர தந்த்ரனான ஜீவனுக்கேயொழிய ஸவதந்தரனான அரசனுககு ஏற்படாதது) போல இஙகும (பாதந்த்ரனான ஜீவனைக காட்டிலும் ஸ்வதந்தரனான பரமனுக்கு) வாசி யுணடு.

४०. त्वत्पक्षेपि जगद्देहप्रतिमम्बन्धितावशात् ।
जीवस्येव ब्रह्मणोऽपि दोषाः स्युः भोक्तृतादयः ॥

५०. इत्थमत्र पुनस्माङ्ख्यप्रत्यवस्थानमस्यते ।
पू चिदचिद्रूपजगता देहिनः परमात्मनः ॥

---

49-*50. [illegible]ந்த்யதிகரணத்திலும் விலக்ஷணத்வாதிகரணத்திலும் ஸாங்க்யமதத்தில் தோஷங்களிருக்கிறபடியால் அது கைக்கொள்ளத்தக்கதன்று என்று நிலைநிறுத்தப்பட்டது. இவ்வதிகரணத்தில், ப்ரஹ்மகாரணவாதத்திலும் தோஷமிருக்கிறபடியால் அது கைக்கொள்ளத்தகாதது என்று ஸாங்க்யன் மறுபடியும் ஆக்ஷேபிக்க அந்த ஆக்ஷேபம் தள்ளப்படுகிறது. அதாவது,—ப்ரஹ்மகாரணவாதிகள் ப்ரஹ்மத்திற்கு உலகை சரீரமாகக் கொள்வதால், சரீரமுடைய ஜீவனைப்போலே சரீரமுடைய ப்ரஹ்மமும் இன்பதுன்பங்களை அநுபவிக்க நேரிடுகையாலே, ஜீவனைக் காட்டிலும் ப்ரஹ்மத்திற்கு வாசியில்லாமற்போய்விடும் என்னும் ஆக்ஷேபம் இவ்வதிகரணத்தில் தள்ளப்படுகிறது.

50*-51. பூர்வபக்ஷம்-சேதநாசேதனங்களடங்கிய உலகம் ப்ரஹ்மத்திற்கு சரீரமாகையாலே, அத்தகைய ப்ரஹ்மமே உலகிற்கு உபாதானகாரணமாகிறது என்று ப்ரஹ்மகாரண வாதிகளால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இப்படி ஒப்புக் கொண்டால் தோஷம் ஏற்படுகிறது. எப்படியெனில் உலகில் ஜீவனுக்கு சரீரமிருப்பதாலேயே இன்பதுன்பங்களின் அநுபவம் உள்ளது என்பதைக் காண்கிறோம். "ந ஹ வை ஸஶரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி। அஶரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸ்ப்ருஶத: [சாந் 8-12-1] [சரீரமுடையவனாயிருக்கும் வரையில் இன்பதுன்பங்களினின்றும் விடுபடமுடியாது, சரீரமற்றவனை பின்பு இவனை இன்பதுன்பங்கள் தொடுவதில்லை.] என்று வேத

५१. जीवात्मवद्देहयोगप्रयुक्त सुखदुःखयोः ।
भोक्तृत्वापत्तितोऽस्य स्यादविभागस्तु जीवतः ॥

सि ५२. इति चेन्न विभागस्स्यात् हेयप्रतिभटत्वतः ।
शरीरित्वप्रयुक्ता न सुखदुःखोपभोक्तृता ॥

---

மும கூறுகிறது. இபபடி இருககுமபோது பரமாதமாவுககு உலகை சரீரமாக ஒபபுககொண்டால அவனும ஜீவனைப் போலே இனபதுனபஙகளை அனுபவிப்பவனாக வேண்டி வரும. ஆகவிபபடி ஜீவனுக்கும பரஹ்மத்திற்கும வாசி யிலலாமற போய்விடும பரஹமகாரண வாதிகளோவெனில ஜீவனைபபோலே பரமாத்மாவை இனபதுன்பங்களை அனு பவிபபவனாக ஒபபுககொளளவதிலலை. ஆகவிப்படி பரஹ்ம காரணவாதத்திலும தோஷமிருககிறபடியால் அது கைக கொள்ளத்தகாததேயாகும.

*52–56.* **ஸித்தாநதம—இபபூாவபக்ஷம் தவறு.** பரமாத்மா வானவன தாழவுகளுககெலலாம எதிாததடடாயிருபப வனாகையாலே, உலகை சரீரமாகக கொணடிருபபதால மாததிரம அவன் சரீரமுடைய ஜீவனைபபோலே இனப துன்பங்களை அனுபவிபபவனாக முடியாது. ஆகையால ஜீவனைக்காட்டிலும ப்ரஹ்மத்திற்கு வாசி இருககவே செய் கிறது. எப்படியெனில் இனபதுன்பஙகளை அனுபவிப்பது சரீரமுடையவனாயிருப்பதால மாத்திரமலல, காமததாலேயே யாகும. '**ந ஹ வை**'' என்று தொடங்கும வேதவாக்யமானது **கா்மத்தால் ஏற்பட்ட** சரீரமிருககும் வரையில் ஜீவனுக்கு இன்பதுன பங்களிருக்கவே செய்யும், அது விடுபட்டபின்பே அவை விடும் எனறே கூறுகிறது. ''**ஸ ஏகத₄ா ப₄வதி த்ரித₄ா ப₄வதி**' [சாங் 7–26–2] [முகதாத்மா ஒரு சரீரமுடைய வனாகிறான, மூன்று சரீரமுடையவனாகிறான] ''**ஸ யதி₃ பித் ருலோக காமோ ப₄வதி**'' [சாங் 8–2–1] [முக்தன் பிதரு லோகததிறகுச் செலல விரும்பினாைகில] ''**ஸ தத்ர பர்யேதி**

५३. कर्ममूलैव "न ह वा" इति कर्मवपुःपरम्।
"स एकधे"त्यादिवाक्यान्मुक्तस्यापि शरीरिता॥
५४. श्रूयतेऽतः परस्यास्य नितरां भोक्तृता नहि।
राजाज्ञावर्तिनां लोके यथा तदतिवर्तिनाम्॥

---

ஜக்ஷத க்ரீட்₃ந ரமமாண [சாந் 8-12-3] [முக்தன் பரமாத்மாவை அனுபவிக்கிறான், சாப்பிடுவது, விளையாடுவது, இன்புறுவது முதலான எல்லா போகங்களையும் பரமாத்மாவிடமே அடைகிறான்.] முதலான ஶ்ருதிகளில் கர்மக்ருத சரீரத்தினின்றும் விடுபட்ட முக்தாத்மாவுக்கும் அகர்மக்ருதமான சரீரம் உள்ளதாகக் கூறப்படுகிறது. முக்தாத்மாவுக்கே இப்படியாம்போது ப்ரஹ்மத்துக்கு சரீரமிருப்பதால் தோஷமேற்படாது என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆகையால், 'ந ஹ வை' என்று தொடங்கும் வாக்யம் கர்மத்தால் ஏற்பட்ட சரீரத்தைப் பற்றியதே என்று ஒதுக்கியே தீர வேண்டும். உலகம் பரமாத்மாவுக்கு அவருடைய நித்யேச்சையாலே சரீரமாயிருக்கிறதேயொழிய, கர்மத்தாலே சரீரமாயில்லை. தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த்தட்டாயிருக்கும் பரமாத்மாவுக்குக் கர்மமே கிடையாது. ஆகையால், பரமாத்மா உலகை சரீரமாகக் கொண்டிருந்தாலும், அவருக்கு ஜீவனைப் போலே இன்பதுன்பங்கள் ஏற்பட வழியேயில்லை. ஆகையால் ஜீவனைக்காட்டிலும் பரஹ்மத்திற்கு வாசியில்லையென்று சங்கிக்க இடமேயில்லை. இவ்விஷயத்தில் ஒரு லோகத்ருஷ்டாந்தமும் உள்ளது. அதாவது—உலகில் அரசனின் ஆணையைப் பின்பற்றுகிறவர்கள் இன்பமடைவதையும், அதை மீறுகிறவர்கள் துன்பமடைவதையும் காண்கிறோம். ஆனால் அரசன் தன் ஆணையைத் தான் பின்பற்றுவதால் ஒரு இன்பத்தையும், மீறுவதால் ஒரு துன்பத்தையும் அடைவதில்லையென்பதையும் காண்கிறோம். இங்கு பிரஜைகளைப்போலே அரசனும் சரீரமுடையவனாயிருந்தும் இன்பதுன்பங்களை அடைவதில்லை, எதனாலென்று ஆராய்ந்தால், பிரஜைகள்

५५. सुखदुःखान्वयेऽप्यस्य राज्ञो देहित्वमात्रतः ।
न स्यात्तदुपभोक्तृत्वमनन्याधीनतावशात् ॥

५६. अतो जगच्छरीरस्य ब्रह्मणस्सर्वशासितुः ।
विश्वोपादानतावादः दोषगन्धविवर्जितः ॥

॥ इति भोक्त्रापत्त्यधिकरणम् ॥

---

அரசனுக்குப் பரதந்திரர்களாய் (வசப்பட்டிருப்பவர்களாய்) இருப்பதாலே அவனுடைய ஆணையைப் பின்பின்பற்றுவதாலும், மீறுவதாலும் அவ்வரசனின் அநுக்ரஹத்தாலும் நிக்ரஹத்தாலும் ஏற்படும் இன்பதுன்பங்களை அடைகிறார்களென்றும், அரசன் அப்படி எவர்க்கும் பரதந்திரனாயில்லாமையாலே இன்பதுன்பங்களை அடைவதில்லையென்றும் அறிகிறோம். அவ்வண்ணமே ஸர்வலோக சக்ரவர்த்தியான ஸர்வேச்வரனுக்குப் பரதந்திரனாயிருக்கும் ஜீவன், அவனுடைய ஆணையைப் பின்பற்றுவதாகிற புண்யகர்மத்தைச் செய்வதால் அதனால் வரும் இன்பத்தையும், அவ்வாணையை மீறுவதாகிற பாபகர்மத்தைச் செய்வதால், அதனால் வரும் துன்பத்தையும் அனுபவிக்கிறான் என்றும், எவர்க்கும் பரதந்திரனாயில்லாதவனாகையாலே கர்மவசப்படாத பரமாத்மா அத்தகைய இன்பதுன்பங்களை அடைவதில்லையென்றும் விளங்குகிறது. ஆகையால், ஜீவனைக்காட்டிலும் ப்ரஹ்மத்திற்கு நெடுவாசியுண்டு. ஆக, உலகை சரீரமாகக் கொண்டவனாயிருந்தபோதிலும், அனைவரையும் நியமிப்பவனாய், தான் எவராலும் நியமிக்கப்படாதவனாயிருக்கும் ஸர்வேச்வரன், இன்பதுன்பமற்றவனாய் உலகிற்கு உபாதானகாரணமாகவும் ஆகிறான் என்னும் வைதிகமதம் தோஷத்தின் நாற்றமும் அற்றது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

போக்த்ராபத்த்யதிகரணம் முற்றிற்று

॥ आरम्भणाधिकरणम् ॥ (२-१-६)

सि-सू-॥ तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः ॥ (२-१-१५)

५७. आश्रित्यानन्यतां कार्यहेत्वोर्विश्वपरात्मनोः ।
विश्वकारणताऽस्योक्ताऽनन्यता साऽत्र साध्यते ॥

## ஆரம்ப₄ணாதிகரணம் ॥ 2-1-6 ॥

(ஸி. ஸூ:) ததநந்யத்வமாரம்ப₄ணஶப்₃தா₃தி₃ப்₄ய: ॥2-1-15॥

தத₃நந்யத்வம்—காரணமான ப்ரஹ்மத்தைக்காட்டிலும் (காரியமான உலகம்) வேறுபடாமலேயுள்ளது, ஆரம்ப₄ண ஶப்₃தா₃தி₃ப்₄ய -'வாசாரம்ப₄ணம்' முதலான வேதவாக்கியங்களிலிருந்து (இது விளங்குகிறது.)

57. "அஸதி₃தி சேந்ந ப்ரதிஷேத₄மாத்ரத்வாத்" [ப்ரஹ்மஸூத்ரம் 2-1-7] முதலானவிடங்களில் காரணமான ப்ரஹ்மமும், காரியமான உலகமும் வேறுபடாமலிருப்பவையே என்று ஒப்புக்கொண்டு, ப்ரஹ்மம் ஜகத்காரணமாகிறது என்று நிலைநிறுத்தப்பட்டது. இவ்வதிகரணத்தில் கார்யகாரணங்களான ஜகத்ப்ரஹ்மங்கள் வேறுபட்டவையாயிருக்கவேண்டுமேயொழிய ஒன்றாயிருக்க முடியாது என்னும் தார்க்கிகர்களின் ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதன்மூலம், ஜகத்ப்ரஹ்மங்கள் வேறுபடாதவையே என்று முன் சொன்ன அர்த்தம் நிலைநிறுத்தப்படுகிறது.

58-60*—பூர்வபக்ஷம். உலகில் எங்குமே காரண வஸ்துவைக்காட்டிலும், காரியவஸ்து வேறுபட்டதாகவே காண்கையால், காரணமான ப்ரஹ்மமும் காரியமான உலகமும் வேறுபடாமல் (ஒன்றாக) இருக்கமுடியாது. காரணவஸ்துவைக்காட்டிலும் காரியப்பொருள் வேறாகவே

पू ५८. विश्वेशयोरनन्यत्वं न कदाप्युपपद्यते।
नहि हेतोरनन्यत्वं संभवेत्कार्यवस्तुनः ॥
५९. नामधेयाऽऽकारकार्यकालधीभेददर्शनात्।
कारकीयक्रियाजातवैयर्थ्यापत्तितोऽपि च ॥

---

யிருககவேண்டுமஎனபதைக காட்டும ஹேதுககள் பல இருககினறன. அவையாவன -(1) புததிபே$_4$த$_3$ம்–காரணமான மண்கட்டியும, காரியமான குடமும வெவவேறு அறிவினல அறியபபடுகினறன. (2) நாமபே$_4$த$_3$ம—மணகட்டியைக குடமெனபதிலலை; குடததை மண்கட்டியெனபதிலலை. (3) ஆகாரபே$_4$த$_3$ம்–மண்கட்டி உருண்டை வடிவை உடையதாயிருககிறது, குடம அடிபருத்து நுனி சிறுதத வடிவததை உடையதாயிருககிறது. (4) காரியபே$_4$த$_3$ம— குடததைக் கொணடு நீர கொணடுவரமுடிகிறதேயொழிய, மணகட்டியைககொண்டு நீர கொணடுவர முடிவதிலலை. மண்ணைக கொண்டு மண்சட்டி செய்யமுடிகிறதேயொழியக குடததைக கொணடு சட்டி செயயமுடிவதிலலை. (5) காலபே$_4$த$_3$ம— மண்ணிருபபது முற்காலததில, குடமிருபபது பிறகாலததில. காரணததிறகும காரியததிறகும் இபபடி ஐநது விதமான பேதமிருபபதிலிருநது காரணபபொருளைககாட்டிலும, காரியப் பொருள் வேறுபட்டதே என விளங்குகிறது. மேலும. காரணமான மணகட்டியைக காரியமான குடமாககுவதறகுக குயவன மணகட்டியைக சககரததில வைத்துச சுழறறுவது முதலான செயலகளைச் செய்யவேண்டியிருககிறது. இச் செயலகளே காரகவயாபாரம் எனபபடும. மணணும குடமும ஒனறேயாகில, மண்ணைககுடமாகக இநதககாரகவ்யாபாரம தேவையிலலை என்று கொள்ளவேணடிவரும. இது ப்ரதயக்ஷவிருததம். ஆக, மண்கட்டியைக குடமாககக காரகவ்யாபாரம் தேவைபபடுவதிலிருநதும காரணபபொருளைக காட்டிலும, காரியபபொருள் வேறுபட்டதே என விளங்குகிறது. ஆகையால பரஹ்மத்தின காரியபபொருளான உலகம காரணமான பரஹமததைககாட்டிலும வேறுபட்டதேயாக

पू १२९. तनुविश्वादिकं कार्यं स्वसजातीयहेतुजम् ।
कार्यत्वाद्घटवल्लोक एवमेव हि दृश्यते ॥

१३०. प्रकृते पक्षतन्त्वादेः सुखदुःखादिरूपतः ।
तत्सरूपं कारणं तत् प्रधानमिति सिद्ध्यति ॥

१३१. सुखाद्यात्मकसत्त्वादिद्रव्यसङ्घातरूपिणः ।
सि प्रधानस्यैव साजात्यमिति चेत्तन्न युक्तिमत् ॥

---

கள் எனப்படுகின்றன. பதினொரு இந்திரியங்களும், ஐந்து பூதங்களும் மற்ற தத்துவங்களின் விகாரங்களாய் தாம் ஒரு தத்துவத்திற்கும் காரணமாயிராமையால், (மிகவல) விகாரங்களென்றும், விகருதிகளென்றும் கூறப்படுகின்றன. புருஷ தத்துவமோவெனில், பரிணாமமில்லாததாகையால் எதற்கும் ப்ரக்ருதியாகவோ விகருதியாகவோ அல்லாமலிருப்பது. அதனாலேயே, குணமற்றதாய், கேவலசைதந்யஸ்வரூபமாய், நித்யமாய், செயலற்றதாய் எங்குமிருப்பதாய், ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாயிருப்பது. விகாரமற்றதாய், செயலற்றதாயிருக்கையால் புருஷதத்துவம் கர்த்தாவாகவும், போக்தாகவும் அல்லாததாயிருக்கிறது. இப்படியிருக்கும் போது அறிவிலிகள் ப்ரக்ருதிபுருஷர்களின் ஸாந்நித்யமாத்ரத்தைக்கொண்டு புருஷனுடைய சைதந்யத்தை ப்ரக்ருதியிலும் ப்ரக்ருதியின் கர்த்ருத்வத்தைப் புருஷனிடமும் ஏற்றிட்டு 'நானே கர்த்தா, போக்தா' என நினைக்கிறார்கள். இப்படிப்பட்ட அஜ்ஞானத்தால் ஸம்ஸாரமும், முற்கூறிய தத்துவங்களின் ஜ்ஞானத்தால் மோக்ஷமும் ஏற்படுகிறது. இம்மதமானது அநுமானத்திற்குப் பொருந்தியதாயிருக்கிறது. எப்படியெனில், "சரீரம், உலகம் முதலான கார்யப்பொருள்கள், தம்மைப்போன்ற அசேதனப்பொருளையே காரணமாகக் கொண்டவை, கார்யப்பொருளாயிருக்கையால், குடத்தைப்போலே" என்பது அநுமானம். உலகத்தில் இப்படியேயன்றோ காணப்படுகிறது. இங்கு, * பக்ஷமான

---

* பக்ஷம், ஸாத்யம், ஹேது முதலானவற்றின் விவரணத்தை ஸங்கதகாரிகாவளியில் கண்டுகொள்வது.

१३२. प्राज्ञानधिष्ठितं तन्न प्रधानं विश्वकारणम्।
अचेतनस्य तदभिज्ञानधिष्ठितवस्तुनः॥

१३३. रचनानुपपत्तेस्तदभिज्ञाधिष्ठितस्य च।
तत्प्रवृत्तेर्दर्शनाच्च यथा दार्वादि केवलम्॥

१३४. रथादिकार्यनिर्माणे न समर्थमिदं ततः।
प्राज्ञानधिष्ठितं न स्यात्प्रधानं विश्वकारणम्॥

---

சரீரம் முதலானவை ஸுகதுக்கமயமாயிருப்பதால், ஸுகாதிரூபமான ஸத்வாதித் திரவியங்களின் ஸமூஹமாயிருப்பதான ப்ரக்ருதியே இவற்றுக்கு ஸஜாதீயமாயிருப்பதால் காரணமாயிருக்கமுடியும்.

*131*-134.* ஸித்தாந்தம்—இந்த ஸாங்க்ய பக்ஷம் யுக்திகளுக்குப் பொருந்தியதன்று. அறிவாளியான சேதனனாலே அதி$_4$ஷ்டிக்கப்படாத மூலப்ரக்ருதி உலகிற்குக் காரணமாக முடியாது. உலகில், மரம் முதலானவை மாத்திரம் தாமே ரதம் முதலானவற்றை உண்டாக்குவதில்லை. அதை ஆக்கத்தெரிந்த தச்சன் முதலானவர்களால் பண்படுத்தப்பட்டால்தான் அவை ரதம் முதலானவையாக ஆகின்றன. அதுபோலவே அசேதனமான ப்ரக்ருதி தானே சரீரம் முதலியவற்றை உண்டாக்கமாட்டாது. அவற்றையறிந்த பரமசேதனனாலே அதி$_4$ஷ்டி$_2$க்கப்பட்டால்தான் அவற்றை உண்டாக்கமுடியும். ஆகையால், ஸர்வேஶ்வரனாலே அதி$_4$ஷ்டி$_2$க்கப்படாத ப்ரத$_4$ானம் ஜகத்காரணம் என்னும் ஸாங்க்யமதம் யுக்திகளுக்குப் பொருந்தியதன்று. ஸாங்க்யர்கள் சொல்லுகிறபடி ஸத்வம் முதலானவை த்ரவ்யங்களாயிராமல் குணங்களாயிருப்பவை என்றே லோகவேதங்களில் பிரஸித்தியுள்ளபடியால், குணங்களான அவை உலகிற்கு உபாதானமாக முடியாது என்பதை ஸூத்ரத்தில் உள்ள அநுக்தஸமுச்சாயகமான முதல் சகாரம் உணர்த்துகிறது.

सि-सू-पयोम्बुवच्चेत्तत्रापि ॥ (२-२-२)

पू १३५. प्राज्ञानधिष्ठितक्षीरमेघमुक्ताम्बुनोर्यथा ।
दधिभावेन चूतादिरसरूपेण च स्वयम् ॥

१३६. परिणामस्तथाऽस्यापि युज्यते केवलस्य सः ।
सि मैवं प्राज्ञानधिष्ठाने प्रवृत्तिर्नोपपद्यते ॥

---

**ஸி. ஸூ:-பயோம்பு₃வச்சேத் தத்ராபி ॥ 2-2-2 ॥**

**பயோமபு₃வத சேத்**—பாலும, நீரும (சேதனனுல் அதிஷ்டிககப்படாமலே பரிணமிப்பது)போல (ப்ரத₄ானமும் தானுகவே பரிணமிககலாம்) எனில், **தத்ர அபி**-அவ்விடத்திலும (சேதனனுல் அதி₄ஷ்டிக்கப்பட்டே பரிணமம ஏறபடுகிறது)

*135-*136.* **பூர்வபக்ஷம்.** முன ஸூத்ரததில சொன்னது சரியன்று; ஏனெனில, பாலானது ஒரு சேதனனுல அதி₄ஷ்டிக்கப்படாமல தானே தயிராவதைக்காண்கிறோம, மேகத்திலிருந்து விழுந்த மழை நீரும தானுகவே இளநீர், மாம்பழ ரஸம், புளிரஸம முதலியவையாக மாறுவதைக்காண்கிறோம். இவைபோலே ப்ரத₄ானமும் ஒரு சேதனனுல் அதி₄ஷ்டிக்கபபடாமல தானே பரிணமமடையக்குறையில்லை.

*136*—137.* **ஸித்தாந்தம.** இப்பூர்வபக்ஷம் தவறு; மரம் மண் முதலானவை ஒரு சேதனனுல அதி₄ஷ்டிககப்பட்டே ரதம், குடம் முதலியவையாகப் பரிணமிப்பதைக் காண்கிறோம். இவற்றை திருஷ்டாந்தமாககொண்டு, பரிணமம் நிகழும் மற்ற இடஙகளிலும ஒரு பரமசேதனனுல அதி₄ஷ்டிக்கப்பட்டே அப்பரிணமம் நிகழ்கினறது என்று அனுமானத்தால ஸாதிககபபடுகிறது. பால் தயிராம்

१३७. यदुक्तं क्षीरवार्यादि सर्वं पक्षीकृतं हि तत्।
"योप्सु तिष्ठ"न्निति श्रुत्या प्राज्ञाधिष्ठितता मता॥

सि-सू-व्यतिरेकानवस्थितेश्चानपेक्षत्वात्॥ (२-२-३)

१३८. प्राज्ञाधिष्ठानानपेक्षपरिणामित्वमुच्यते।
यदि प्रधानस्य, तर्हि सर्गस्य व्यतिरेकतः॥

---

போதும், மழைநீர இளநீர முதலியவையாமபோதும அப்பரமசேதனனுல அதி₄ஷ்டிககப்பட்டே அவவாறு ஆகின்றன எனறும ஸாதிககிறது அவ்வனுமானம. இவவண்ணமாக, பால, மழைநீர் முதலானவையும அவ்வனுமானததில பக்ஷமாயிருககுமபோது. அவறறையே திருஷ்டாநதமாககி அனுமானததைத தகர்ககப்பாாபபது முறையன்று. "யோऽபஸு திஷ்ட₂ந" [ப₃ருஹ 5-7-4] முதலான ஶ்ருதிகளில நீா முதலானவறறிலும் நினறு அவறறைபபரிணமிக்கச் செய்பவன பரமாத்மாவே எனறு ஓதபபட்டது ஆகையால, நீா முதலானவறறை திருஷ்டாந்தமாககுவது வேதவிருத்தமாகவுமஆகிறபடியால ஒரு சேதனனுலஅதி₄ஷடி₂ககபபடாமல ப்ரகருதியானது பரிணமிககமுடியாது எனறு முனஸூத்ரததில் சொன்னது தகர்க்கவொணணுததேயாகும.

## ஸி. ஸூ:-வ்யதிரேகாநவஸ்தி₂தேஶ்சாநபேக்ஷத்வாத் ॥ 2-2-3 ॥

**அநபேக்ஷத்வாத**—(சேதனனுல அதி₄ஷடிககப்படுவதை) எதிர்பாராமையால், **வ்யதிரேகாநவஸ்தி₂தே ச**— ஸ்ருஷ்டியிலும வேறுன நிலையான லயநிலையில நிலலாமல (பரகருதிக்கு எபபோதும ஸருஷ்டியே ஏறபட்டுககொணடு) இருககவேண்டி வருமாகையாலும (ஸவதந்த்ரப்ரகருதி ஜகதகாரணமாகமுடியாது.)

*138–140*. **ஸிததாநதம்**. ஒரு சேதனனுல அதி₄ஷ்டிககப்படாமலே பரக்ருதிககுப பரிணுமம் ஏற்பட்டுவிடும எனறு

१३९. प्रतिसर्गावस्थयावस्थित्यभावः प्रसज्यते ।
यस्मात्प्राज्ञानपेक्षत्वं प्रकृतेस्सर्गकर्मणि ॥

१४०. प्रोक्तं तस्मात्सर्वदैव सृष्टिर्ह्यस्याः प्रसज्यते ।
प्राज्ञानधिष्ठितं नातः प्रधानं विश्वकारणम् ॥

सि-सू-अन्यत्राभावाच्च न तृणादिवत् ॥ (२-२-४)

---

பூர்வபக்ஷத்தில் சொல்லப்படுகிறது. இப்படி ஒப்புக்கொண்டால், எப்போதும் ஸ்ருஷ்டியே ஏற்பட்டுக் கொண்டிருக்குமேயொழிய ஸ்ருஷ்டியிலும் வேறுபட்ட லயநிலை ப்ரக்ருதிக்கு ஏற்படமுடியாது. ஒரு சேதனனால் அதி₄ஷ்டிக்கப்பட்டிருந்தால், அவன் ஒரு காலத்தில் ஸ்ருஷ்டி ஏற்படும்படியாகவும், பிறிதொருகாலத்தில் லயம் ஏற்படும்படியாகவும் செய்யலாம்; அதில்லாமையாலே பரிணாமத்தையே இயல்வாகக்கொண்ட ப்ரக்ருதி எப்போதும் ஸ்ருஷ்டிநிலையிலேயே இருக்கவேண்டி வருமேயொழிய, பரிணாமமின்மையாகிற லயநிலையை அடையமுடியாது. பூர்வபக்ஷியோ ப்ரக்ருதி லயநிலையையும் அடைவதாக ஒப்புக்கொள்ளுகிறான். இது ஒட்டாது. இக்காரணத்தாலும் ஸ்வதந்த்ரப்ரக்ருதி ஜகத்காரணமாகமாட்டாதென விளங்குகிறது.

## ஸி.ஸூ:- அந்யத்ராப₄ாவாச்ச ந த்ருணாதி₃வத் ॥2-2-3॥

த்ருணாதி₃வத் ச—(பசுவினால் உண்ணப்படும்) புல் முதலானவை (சேதனனால் அதி₄ஷ்டிக்கப்படாமலே பாலாகப் பரிணாமமடைவது) போலே இதுவும் என்று கூறுவதும், ந—ஒட்டாது; அந்யத்ர—காளை முதலானவற்றால் உண்ணப்படும் புல் முதலானவற்றுக்கு, அப₄ாவாத்—(பாலாகப் பரிணாமம்) காணப்படாமையால் (இங்கும் சேதநாதி₄ஷ்டா₂நம் உள்ளதென்று தேறுகிறபடியால்.)

१४१. धेन्वादिना चर्वितस्य तृणादेः क्षीरता यथा।
स्वयं भवति तद्वच्च प्रधानस्येति नोचितम्॥
१४२. तस्य तत्परिणामश्च प्राज्ञस्थित्यैव जायते।
तदन्यवृषभुक्तस्य क्षीरभावो न दृश्यते॥
सि-सू-पुरुषाश्मवदिति चेत्तथापि॥ (२-२-५)

---

*141-*141–பூர்வபக்ஷம். பசு முதலானவற்றால் உண்ணப் பட்ட புல் முதலானவை தாமாகவே பாலாகப் பரிணமிப்பதைக் காண்கிறோம். அதுபோலே ப்ரக்ருதியும் தானாகவே பரிணமிக்கலாமே.

*141–142–ஸித்தாந்தம்– இப்பூர்வபக்ஷமும் தவறு. "பயோம்பு₃வச்சேத் தத்ராபி' என்னும் ஸூத்ரத்தில் சொன்னபடி இப்புல் முதலானவையும் பக்ஷத்தில் சேர்ந்தவையே. மேலும், புல் முதலானவை சேதனனால் அதி₄ஷ்டிக்கப்படாமல் தாமாகவே பாலாக மாறுவதில்லை என்பது மற்றொரு காரணத்தாலும் விளங்குகிறது; அதாவது —இதே புல் முதலானவற்றைக் காளை மாடு உண்ணும்போது அவை பாலாவதில்லையாகையால். ஒரு சேதனனால் அதி₄ஷ்டிக்கப் பட்டே புல் முதலானவை பசுவின் வயிற்றில் பாலாகின்றன என்று உணர்கிறோம். இக்காரணத்தாலும் ஸ்வதந்த்ர ப்ரக்ருதி ஜகத்காரணமாகமாட்டாது என விளங்கும்.

**ஸி. ஸூ:-புருஷாஶ்மவதி₃தி சேத் தத₂ாऽபி ||2-2-5||**

**புருஷாஶ்மவத இதி சேத**—கண்ணுள்ள நொண்டியின் உதவியாலே குருடன் செயல்படுவதுபோலும், காந்தக்கல்லின் ஸந்நிதியில் இரும்பு செயல்புரிவதுபோலும் (புருஷனின் ஸந்நிதியில் ப்ரக்ருதி செயல்படலாம்) எனில், **தத₂ா அபி**– இவ்விடங்களிலும் வாசியுண்டாகையாலே (புருஷஸந்நிதானத்தால்மாத்திரம் ஸ்வதந்த்ரப்ரக்ருதி பரிணமிக்க மாட்டாது.)

१४३. पङ्ग्वंदृक्शक्तियुक्तस्य सान्निध्यात्तत्रचोदितः ।
अन्धः प्रवृत्तिशक्तोऽन्यः यथा कार्ये प्रवर्तते ॥

१४४. अयस्कान्ताश्मसान्निध्यात् यथा चायः प्रवर्तते ।
एवं पुरुषसान्निध्यात् प्रकृतिश्च प्रवर्तते ॥

१४५. इति चेन्न प्रधानस्य प्रवृत्तिर्नोपपद्यते ।
पङ्गोर्मार्गोपदेशादिव्यापारस्तत्र दृश्यते ॥

---

*143–144.* **பூர்வபக்ஷம்.** கண் தெரியும் நொண்டி ஒருவன் கூட இருக்கும்போது, (தன்மேல் ஏறியிருக்கும்) அவனால் வழிகாட்டப்பட்டு, நடக்கவல்ல குருடன் ஒருவன் தேவையான இடங்களுக்குச் சென்று தொழில் புரிவதைக் காண்கிறோம். காந்தக்கல் அருகிலிருக்கும்போது இரும்பு செயல் புரிவதையும் காண்கிறோம். அதுபோலவே ப்ரவ்ருத்தி சக்தியற்ற புருஷனுடைய ஸந்நிதியிருக்கும்போது அறிவற்ற மூலப்ரக்ருதி செயல்புரியத் தட்டில்லை. புருஷன் ப்ரதா$_4$னத்தை அனுபவிக்கும் பொருட்டும் அவனது மோக்ஷத்தின் பொருட்டும் ப்ரக்ருதிக்குப் புருஷஸந்நிதா$_4$னம் எங்கள் மதத்தில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆகையால் ஸ்வதந்த்ரப்ரக்ருதியானது புருஷஸந்நிதி$_4$மாத்திரத்தாலே ஜகத்காரணமாகலாம்.

*145–148.* **ஸித்தாந்தம்.** இப்பூர்வபக்ஷம் தவறு. புருஷஸந்நிதியை ஒப்புக்கொண்டாலும் ப்ரதா$_4$னத்திற்கு ப்ரவ்ருத்தி ஒட்டாது. நொண்டி குருடன் த்ருஷ்டாந்தமும் இங்கு பொருந்தாது. நொண்டியானவன் நடக்கமுடியாதவனாயினும், வழிகாட்டுவது முதலான தொழில்களைப் புரியக் கூடியவன், அவற்றைச் செய்தாலன்றோ குருடன் அவனை அழைத்துச் செல்லமுடியும். குருடனுக்கும் நொண்டி காட்டும் வழியைப் புரிந்துகொள்ளக்கூடிய அறிவு இருக்க வேண்டும். இங்கோவெனில், புருஷன் க்ரியையற்றவன்

१४६. पङ्गूपदेशग्रहणमन्धस्यापि च वर्तते।
अयस्समीपागमनमयस्कान्ताश्मनोऽस्ति हि॥
१४७. पुंसोऽत्र निष्क्रियत्वाद्धि विकारो नास्ति तादृशः।
ततस्तत्सन्निधानान्न प्रवृत्तिः प्रकृतेर्भवेत्॥
१४८. तत्सान्निध्यस्य नित्यत्वात् नित्यसर्गः प्रसज्यते।
नित्यमुक्तत्वतोऽस्य स्यादभावो बन्धमोक्षयोः॥
सि-सू–अङ्गित्वानुपपत्तेश्च॥ (२-२-६)

---

என ஒபபுகவொள்வதால நொண்டியையபபோல எதவதாழிலை யும செய்யமுடியாது. அசேதனமான பரகருதியும குருடனைப போல அறிவுடையதனறு ஆகையால் இந்த திருஷ்டாநதத் திறபோல இஙகு தொழில நடககலாம எனறு கூறியது ஒட்டாது. காநதககலலும் இருமபுககு ஸமீபத்தில வந்தாவ தான இருமபு செயலபுரிவதைக் காண்கிறேம். கிரியையறற புருஷனுககு ஸமீபத்தில வருவது முதலான கிரியைகள் கிடையாதாகையால இநத திருஷடாந்ததநிறபோலும புருஷ ஸநநிதானததால ப்ரகருதி ஜகத்காரணமாகமுடியாது. "காந்தககலபோலே அருகில வருவது எனபதிலலை, எப் போதுமே புருஷன ப்ரகருதியின அருகிலேயே இருக்கிறுன" எனில, புருஷஸநநிதி₄ எபபோதுமிருககையால எபபோதும் ஸருஷடிநிலையாகவே இருககவேணடிவரும, ப்ரளயநிலை எனறு ஒன்றை ஸாங்கயர்கள் ஒபபுகவொள்வது வொருந்தா மறபோய்விடும். புருஷனை நிதயமுகதனுக ஒப்புகவொளவ தால அவனுககு ஸமஸாரபந்தம் ஏறபடுவதும். மோக்ஷம ஏறபடுவதுமாகிய இரணடுமே ஸாஙகய மததநில ஒட்டாது.

**ஸி-ஸூ:- அங்கி₃த்வாநுபபத்தேஶ்ச ॥ 2-2-6 ॥**

**அங்கி₃த்வாநுபபததே:** ச-குணஙகளில ஒனறின் (ஏறறத் தாலவரும்) அஙகி₃தவம வொருநதாதாகையாலும (ஸவதநத்ர ப்ரக்ருதி ஜகதகாரணமனறு)

१४९. प्रतिसर्गदशायां च गुणानां समताजुषाम् ।
एकस्योत्कर्षरूपाङ्गिभावस्यानुपपत्तितः ॥

१५०. तदुत्कर्षापकर्षात्माऽङ्गाङ्गित्वोत्थजगत्कृतिः ।
न संभवत्यतः प्राज्ञमङ्गि तत्रैव कारणम् ॥

सि-सू-अन्यथानुमितौ च ज्ञशक्तिवियोगात् ॥ (२-२-७)

१५१. उक्तरीत्यन्यरीत्यैव प्रधानानुमितावपि ।
ज्ञातृत्वशक्तिशून्यत्वादस्य दोषास्तथा स्थिताः ॥

---

*149-150.* ஸித்தாந்தம். ப்ரளயத்திலே ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் மூன்றும் ஸமமாக இருக்கின்றனவென்றும். அவற்றில் ஏற்றத்தாழ்வு ஏற்படும்போது ஸ்ருஷ்டி உண்டாகிறதென்றும் ஸாங்க்யர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ப்ரளயகாலத்தில் ஸமநிலையில் இருக்கும் முக்குணங்களில் ஒன்று கூடுதலாகி அங்கியாய் மற்றவை குறைந்தவையாகி அங்கமாக ஆவதற்கு ஸாங்க்ய மதத்தில் யாதொரு காரணமும் ஒப்புக்கொள்ளப்படாமையால், அம்மதத்தில் ஸ்ருஷ்டிநிலை ஏற்பட வழியேயில்லை. ஜ்ஞானசக்தியையுடைய ஸர்வேஶ்வரன் ப்ரக்ருதியை அதிஷ்டிப்பதாக ஒப்புக்கொண்டாலொழிய முக்குணங்களில் ஏற்றத்தாழ்வு ஏற்பட இடமேயில்லை. இக்காரணத்தாலும் ப்ராஜ்ஞன் எனப்படும் ஸர்வேஶ்வரனோடு தொடர்பற்ற ஸ்வதந்த்ர ப்ரக்ருதி ஜகத்காரணமாகவே மாட்டாது.

**ஸி. ஸூ:-அந்யதா2நுமிதௌ ச ஜ்ஞஶக்திவியோகா3த் ॥ 2-2-7 ॥**

அந்யதா2நுமிதௌ ச—(வேறுவிதமாக) ப்ரதா4னத்தை அநுமானம் செய்தாலும், **ஜ்ஞஶக்திவியோகா3த்**— அறிவுடைத்தாயிருக்கும் சக்தி இல்லையாகையால் (ப்ரதா4னம் ஜகத்காரணமாகமாட்டாது.)

*151.* ஸித்தாந்தம்—முன் ஸூத்ரத்திற்கூறிய தோஷங்களைத் தவிர்ப்பதற்காக, 'ஒருகுறிப்பிட்ட காலத்தில் குணங்

सि-सू-अभ्युपगमेप्यर्थाभावात् ॥ (२-२-८)

१५२. प्रधानस्याभ्युपगमेप्यर्थाभावादनेन च।
तन्नानुमेयं भोगापवर्गरूपप्रयोजनम् ॥

१५३. निर्विकारस्य पुंसोऽस्ति न भोगः प्रकृतीक्षणम्।
तद्विसर्जनरूपापवर्गश्च स्यात्कदापि न ॥

---

களில ஏற்றத்தாழ்வை விளக்கும ப்ரகிருதி மூலப்ரகருதிகளே உள்ளது என்று விஷமஸ்ருஷடியாகிற கார்யத்தைப பார்த்து இந்த ப்ரகிருதியாகிற காரணததை அநுமானம செயவதாக ஸாங்க்யாகள கூறினாலும, அறிவுடையதாயிருககையாகிற ஜஞப்ரகருதி மூலப்ரகருதிககு அடியோடு இலலாமையால முன ஸூதரஙகளில சொனன ரசநாநுபபததி முதலான தோஷங்கள் ஏறபட்டேதீரும். ஆகையால, மூலப்ரகருதி ஜகத் காரணமாகமாட்டாது

ஸி. ஸூ:-அப்₄யுபக₃மேऽப்யர்த்த₂ாப₄ாவாத் ॥ 2-2-8 ॥

அப₄யுபக₃மே அபி— ('அநுமானததினால ப்ரத₄ானம் ஸிததிககிறது என்று) ஒபபுககொண்டாலும், அாதத₂ா ப₄ாவாத—அதனால எபபயனும ஏறபடாதாகையாலே (அதை அநுமானம் செய்யககூடாது.)

*152-154.* ஸிததாநதம். பரத₄ானததை அநுமானததினால ஸாதி₄ககலாம என்று ஒப்புககொண்டாலும, அபபடி ஸாதி₄ககபபட்ட அதனால, ஸாஙகயாகள் கூறகிறபடி பே₄ாக₃ம் மோக்ஷம என்னும இருவிதமான பயனும் விளையாதாகையால், அது அநுமானத்தினால ஸாதி₄ககததககதன்று ப்ரக்ருதியைக காணபது புருஷனுககு பே₄ாக₃ம என்றும, அதினின்றும விடுபடுவது மோக்ஷம என்றும் ஸாஙகயர்களால ஒபபுக்கொள்ளபபடுகிறது. விகாரமறறவனான புருஷனுககுககாண்பது, விடுபடுவது என்னுமிரண்டுமே ஒட்டாதாகையால போகமோக்ஷஙகளிரணடுமே எபபோதும ஒட்டாது.

१५४. तत्सान्निध्यादेव पुंसः भोगस्संभवतीति चेत्।
तत्सान्निध्यस्य नित्यत्वादपवर्गो न सेत्स्यति॥
सि-सू-विप्रतिषेधाच्चासमञ्जसम्॥ (२-२-९)
१५५. पुंसश्च निर्विकारत्वं द्रष्टृत्वं भोक्तृता तथा।
बन्धमोक्षौ न तस्य स्तः प्रकृतेरेव तावुभौ॥
१५६. पुंसो भोगापवर्गार्थं प्रवृत्तिः प्रकृतेस्तथा।
एवं मिथो व्याहतोक्त्या तद्दर्शनमसङ्गतम्॥
॥इति रचनानुपपत्त्यधिकरणम्॥

---

ப்ரக்ருதிஸந்நிதியாலேயே புருஷனுக்கு ப்ரக்ருதியினுடைய விகாரமான ஸுகதுக்கரூபமான போகம் ஏற்படுகிறது எனில்: ப்ரக்ருதிஸந்நிதியானது நித்யமாகையால், எப்போதுமே போகமேயாய் மோக்ஷம் ஏற்பட இடமேயில்லாமற் போய் விடும். ஆக இப்படிப் பயனில்லாமையாலே, ப்ரக்ருதியானது அனுமானத்தால் ஸாதிக்கத்தக்கதன்று.

**ஸி-ஸூ: விப்ரதிஷேதாச்ச அஸமஞ்ஜஸம் ॥ 2-2-9 ॥**

**விப்ரதிஷேதாத் ச**-முன்னுக்குப் பின் முரணுகப் பேசுகையாலும், **அஸமஞ்ஜஸம்**-(ஸாங்க்யமதம்) பொருந்தாததாகும்.

*155-156.* ஸாங்க்யமதமானது பல விஷயங்களில் முன்னுக்குப் பின் முரணுகப் பேசுகையாலும், அது பொருந்தாதது. எப்படியெனில், புருஷன் விகாரமற்றவன் என்று சொல்லும் அவர்களே அவன் ப்ரக்ருதியைக் காண்பவனாகவும், அனுபவிப்பவனாகவும் ஆகிறான் என்றும் கூறுகிறார்கள். காண்கை, அநுபவிக்கை ஆகியவை விகாரங்களேயாகையாலே, இது முன்னுக்குப்பின் முரணுகிறது. மேலும், "ஸம்ஸாரபந்தமும், மோக்ஷமும் புருஷனுக்குக் கிடையாது. அவையிரண்டும் ப்ரக்ருதிக்கே" என்று கூறும் அவர்களே "புருஷனுடைய போகத்திற்காகவும், மோக்ஷத்திற்காகவும் ப்ரக்ருதியானது செயல்படுகிறது" என்றும் கூறுகிறார்கள். இதுவும் முன்னுக்குப் பின் முரணுகிறது. இவ்வண்ணமாகப் பலவிஷயங்களில் முன்னுக்குப்பின் முரணுகப் பேசுகையாலே, ஸாங்க்யமதம் பொருந்தாததேயாகும்.

**ரசநாநுபபத்யதிகரணம் முற்றிற்று**

महद्दीर्घाधिकरणम् ॥ (२-२-२)

सि-सू-महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम् ॥ (२-२-१०)

१५७. प्रधानहेतुवादस्य प्रागसाङ्गत्यमीरितम् ।
अणुकारणवादस्यासामञ्जस्यमिहोच्यते ॥

पू १५८. मिथोऽवयवसंयोगात् अवयव्युद्भवात्तथा ।
अंशाल्पत्वबहुत्वाभ्यामंशिवैषम्यदर्शनात् ॥

१५९. तदंशाल्पत्वकाष्ठा चावश्यकीत्यणवो मताः ।
जगदारंभकास्ते च क्रमात्स्युरिति चेन्न तत् ॥

---

## மஹத்தீ₄ர்க்காதி₄கரணம் ॥ 2-2-2 ॥

### ஸி. ஸூ:- மஹத்தீ₃ர்க்க₄வத்₃ வா ஹ்ரஸ்வ பரிமண்ட₃லாப்₄யாம் ॥ 2-2-10 ॥

ஹ்ரஸ்வ பரிமண்ட₃லாப₄யாம்—த்₃வ்யணுக பரமாணுகக ளிருந்து, மஹதீ₃ாக்க₄வத வா—(முறையே) தர்யணுகமும, த்வ்யணுகமும உண்டாவது பொருந்தாததாயிருப்பது போல (அஸம்ஞஜஸம்—நையாயிகவைஶேஷிகாகளின் மறற கொள்கைகளும பொருந்தாதவையே.)

157. முன அதி₄கரணத்தில ஸ்வதநதர பரத₄ானகாரண வாதம் செய்யும் ஸாங்கயமதம பொருந்தாதுஎன்று நிரூபிககப் பட்டது, இவ்வதிகரணததில, அதி₄ஷ்ட₂ாதாவாக ஈஶவரனை ஒபபுககொணடபோதிலும அணுகாரணவாதம செயயும நையாயிகவைஶேஷிக மதங்கள் பொருந்தமாட்டா எனறு நிரூபிககப்படுகிறது.

158-159*. **பூர்வபக்ஷம்.** பல அவயவஙகள் சேர்ந்து தான் ஓா அவயவியானது உண்டாகிறது. அவயவங்கள் குறைவாயிருந்தால் அவயவி சிறிதாயிருப்பதையும, அவய வங்கள் அதிகமாயிருந்தால அவயவி பெரிதாயிருபபதையும்

सि १६०. द्व्यणुकात्परमाणोश्च त्र्यणुकादिजनिर्यथा ।
तदभ्युपगतं चान्यत् सर्वमप्यसमञ्जसम् ॥

१६१. तन्त्वाद्यवयवास्त्वंशैष्षड्भिः पार्श्वैर्हि सङ्गताः ।
जनयन्त्यवयव्याख्यं पृथुवस्त्वणवोऽपि ते ॥

१६२. तथैव संयुज्यमानाः कल्पेरन् द्व्यणुकादये ।
तदणूनां निरंशत्वे परमाणुशतस्य च ॥

---

காண்கிறோம். அவயவியை அவயவங்களாகப் பிரித்துக் கொண்டே சென்றால், 'இனி பிரிக்க முடியாது' என்னும் நிலை வரும்போது அந்த அவயவங்கள் பரமாணுக்கள் எனப்படுகின்றன. இந்தப் பரமாணுக்களே அடைவே உலகிற்கு உபாதான காரணமாகின்றன.

*159*-164.* **ஸித்தாந்தம்.** இரு பரமாணுக்கள் சேருவதாலே த்வ்யணுகம் உண்டாகிறதென்றும், மூன்று த்வ்யணுகங்கள் சேருவதாலே த்ர்யணுகம் உண்டாகிறதென்றும், இவ்வண்ணமாகவே உலகம் உண்டாகிறதென்றும் அணுகாரணவாதிகள் கூறுகிறார்கள். அவர்கள் மதத்தின் அடிப்படையான இக்கொள்கை பொருந்தாமலிருப்பதுபோலே, மற்ற எல்லாக் கொள்கைகளும் பொருந்தமாட்டா. இக்கொள்கை ஏன் பொருந்தாதெனில், வஸ்திரம் முதலியவற்றின் அவயவங்களான நூல் முதலானவை ஒன்றோடொன்று சேரும்போது ஆறு அல்லது அதற்குக் குறைந்த தம் பக்கங்களில் ஒன்று சேருகின்றன; ஒன்று சேராத பக்கங்களும் இருக்கின்றன. அதனாலேயே இரண்டு அவயவங்கள் ஒன்று சேரும்போது அவற்றைக் காட்டிலும் பெரிதான அவயவி உண்டாகின்றது. இதுபோலவே இரண்டு பரமாணுக்கள் ஒன்று சேரும்போது சேராத பக்கங்களும் சில இருப்பதாலே பரமாணுவைக் காட்டிலும் பெரிதான த்வ்யணுகம் உண்டாகிறது என்று கூறவேண்டும். ஆனால், பரமாணுக்கள்

१६३. संयोगेऽपि न चैकाणुपरिमाणाधिकं महत्।
परिमाणं भवेत्तेषामंशवत्त्वं यदीष्यते॥
१६४. तेपि सांशाः स्वकीयांशैः ते च स्वांशैरिति क्वचित्।
कारणत्वस्य न स्याद्धि व्यवस्थितिरतो न सत्॥

---

அவயவமற்றவை என்று அணுகாரணவாதிகளால் ஒப்புக் கொள்ளப்படுவதாலே அவை ஒன்று சேரும்போது சேராத பக்கங்கள் சில இருக்கின்றன என்று கூறமுடியாது. ஆகையாலே அவயவமற்ற பரமாணுக்கள் நூறு ஒன்று சேர்ந்தாலும் ஒரு பரமாணுவைக் காட்டிலும் பெரிதான பரிமாணமுள்ள பொருளை உண்டாக்கமாட்டா. இந்த தோஷத்தைத் தவிர்ப்பதற்காகப் பரமாணுக்கள் அவயவமுடையவை என்று ஒப்புக்கொண்டால், அவை மேலும் பல அவயவங்களாகப் பிரிக்கத்தக்கவை என்றும், அவை மேலும் பல அவயவங்களாகப் பிரிக்கத்தக்கவை என்றும் இப்படி ஒரு நிலைநில்லாமல் ஒப்புக்கொண்டே செல்ல வேண்டிவரும். ஆகையால், பிரிக்கமுடியாத பரமாணு என்னும் மூலகாரணம் ஒன்று இல்லையாகிவிடும். ஆகையால், பரிமண்டலம் என்னும் பரமாணுவிலிருந்து ஹ்ரஸ்வம் எனப்படும் த்வ்யணுகம் உண்டாவதாகவும், அந்த த்வ்யணுகத்திலிருந்து அதைக் காட்டிலும் பெரிதாகையாலே 'மஹத்தீர்க்கம்' எனப்படும் த்ர்யணுகம் உண்டாவதாகவும் கூறும் அணுகாரணவாதிகளின் அடிப்படைக் கொள்கை ஒட்டாது என்பது தெளிவு. இதுபோலவே அவர்களுடைய மற்ற கொள்கைகளும் பொருந்தாதவையே. இது மேலே விவரிக்கப்பட்டிருக்கிறது. ஸூத்ரத்தில், 'ஹ்ரஸ்வ பரிமண்ட$_3$லாப$_4$யாம்' என்று த்$_3$வ்யணுக பரமாணுக்களாகிய இருகாரணங்களை எடுத்தது. காரியத்தை எடுக்கும்போது 'மஹத்தீ$_3$ர்க்க$_4$ம்' என்று த$_3$வ்யணுக காரியமான த்ர்யணுகத்தை மாத்திரம் எடுத்திருப்பது பரமாணுகாரியமான த்வ்யணுகத்திற்கும் உபலக்ஷணம். ஸூத்ரத்தில் வாஶப்தம் சகாரப் பொருளதாய், மற்ற கொள்கைகளைக் குறிக்கிறது.

सि-सू-उभयथापि न कर्मातस्तदभावः॥ (२-२-११)

१६५. परमाण्वाद्यकर्मादृष्टकारितमुच्यते।
तददृष्टं चाणुगतमथवाऽऽत्मगतं भवेत्॥

ஸி. ஸூ: உப₄யதா₂பி ந கர்மாதஸ்தத₃பா₄வ: ॥2-2-11॥

உப₄யதா₂ அபி- அணு பரமாணுக்களிலுள்ள கிரியைக்குக் காரணமான அத்₃ருஷ்டம் அணுவில் (அல்லது ஜீவனிடம்) இரண்டிலும் எப்படி நிற்கும் ந கர்ம - அக்கிரியை ஏற்படமுடியாது. அத: -ஆகையால் தத₃பா₄வ - அணுக்கள் இரண்டு சேருவது ஒட்டாது.

*165-169.* ஸித்தாந்தம் அணுகாரணவாதத்திலும் மற்றும் பல பொருந்தாமைகள் இருப்பதாகச் சென்ற ஸூத்ரத்தில் வாக்யத்தால் உணர்த்தப்பட்டது. இந்த ஸூத்ரம் முதலாக அவை விவரிக்கப்படுகின்றன. பரமாணுவில் ஆதியில் ஒரு கிரியை உண்டாவதாகவும், அதனால் இரு பரமாணுக்கள் சேர்ந்து த்₃வ்யணுகம் உண்டாவதாகவும், மூன்று த்₃வ்யணுகங்கள் சேர்ந்து ஒரு த்ரஸரேணு உண்டாவதாகவும் இப்படியே படிப்படியாக உலகம் உண்டாவதாகவும் உரைக்கின்றனர் அணுகாரணவாதிகள். அதில், எல்லா வுலகமும் உண்டாவதற்கு மூலகாரணமாகப் பரமாணுவில் ஏற்படும் முதற்கிரியை புண்யபாபங்களால் உண்டாகும் அத்₃ருஷ்டத்தாலேற்படுவது என்றும் ஒப்புக்கொள்கின்றனர், ' **அக்₃னேரூர்த்₄வஜ்வலநம் வாயோஸ்திர்யக்₃க₃மநம் (பவநம்) அணுமநஸோராத்₃யம் கர்மேத்யேதத₃த்₃ருஷ்டகாரிதாநி**' [வைஶேஷிகஸூத்ரம் 5-2-13] [முதன்முதலில் அக்னி உயர எரியத் தொடங்குவதும், முதன்முதலில் வாயு பக்கங்களில் வீசுவதும், அணு மனம் ஆகியவற்றின் முதற்கிரியைகளும் அத்₃ருஷ்டத்தினால் ஏற்படுபவை] என்னும் வைஶேஷிக ஸூத்ரம் காணத்தக்கது. பரமாணுவில் ஏற்படும் இந்த முதற்கிரியைக்குக் காரணமான அத்₃ருஷ்டம் பரமாணுவில் உள்ளதா, அல்லது ஜீவனிடம் உள்ளதா என்னும்

१६६. द्वेधाप्यकादाचित्कत्वाददृष्टस्याऽस्य सर्वदा।
उत्पादकत्वापत्तिः स्यात्कादाचित्कं भवेन्न तत्॥

१६७. ततश्च कर्मणाणूनां संयोगाभाव आगतः।
विपाकापेक्षया नास्य सदोत्पादकतेति चेत्।

१६८. नानाप्रकारादृष्टानामेकदैवैकरूपतः।
न विपाकस्संभवेद्धि तथेशस्यानुमानतः॥

---

கேள்வி எழுகிறது எபபடி ஒபபுககொண்டாலும் பொருந தாது. ஜீவன செயத புணயபாபககிரியைகளால ஏறபடும அத்₃ருஷ்டம பரமாணுவில இருபபது பொருநதாதாகை யால முதலபக்ஷம் ஒட்டாது, இருப்பதாகவே கொணடாலும், எபபோதுமே இருககவேண்டியிருககையால எபபோதுமே கிரியை ஏறபட்டு ஸருஷ்டி ஏறபடவேணடி வரும். ஜீவனிடம உள்ள அதருஷ்டம பரமாணுவில கிரியையை ஏறபடுதது வது பொருநதாதாகையால இரண்டாவது புக்ஷமும ஒட் டாது. அத்₃ருஷ்டமுள்ள ஜீவனுடைய ஸமயோகததால பரமாணுவில கிரியை ஏறபடலாமே எனில ஜீவனிட முள்ள அத்₃ருஷ்ட பரவாஹம நிதயமாகையால எபபோதும ஸருஷ்டி ஏறபடவேணடிவரும. இனி "அத₃ருஷ்ட மானது நித்யமானாலும விபாகமடைநதாலதான பலன கொடுககும் சில அத்₃ருஷ்டங்கள் உடனே பலன கொடுககும. மற்றும் சில வேறு ஜங்மததில பலன கொடுககும். வேறு சில வேறு கலபததில பலன கொடுககும. ஆகவிபபடி விபா கத்தை எதிர்பார்பபதால ஸ்ருஷ்டிகாலததில விபாகமடை யும அத₃ருஷ்டங்களால ஸருஷ்டிஏற்படுவதாகக கொளள லாமாகையால எப்போதும் ஸ்ருஷ்டி எறபட வேணடி வராதே" எனில இதுவும பொருநதாது, ஏனெனில கணக கற்ற ஆத்மாககள ஒருவருக கொருவா ஸஙகேதம (முன ஏறபாடு) செய்து கொள்ளாமல் பலகாலஙகளில செய்த பலவிதமான கர்மஙகளினுல உண்டான அத₃ருஷ்டஙகள

१७०. समवायाभ्युपगमाच्चेदं मतमसङ्गतम्।
द्रव्यापृथक्सिद्धिहेतुतया जात्यादिकस्य च॥
१७१. इष्यते समवायोऽयं तथाभावेऽप्यमुष्य च।
साम्याच्च हेत्वपेक्षायाः अनवस्था प्रसज्यते॥
१७२. स्वाभाविकस्तथाभावस्सम्बन्धस्येति चेत्तदा।
एष स्वभावो जात्यादेरेव युक्तः किमन्यतः॥

---

கொள்ளவேண்டிவருகையாகிற) ஸாம்யத்தாலே, அநவஸ்தி₂தே—ஒருநிலை நிலலாமறபோகவேண்டிவருகிறதாகையால (அஸமஞ்ஜஸம—அணுகாரணவாதம பொருந்தாது)

170–172. ஸித்தாந்தம். ஸமவாயம என்னும ஸம்பந்தத்தைஒப்புககொள்வதாலும அணுகாரணவாத₃ம் பொருந்தாது. க₄டத்வம முதலிய ஜாதி முதலானவை க₄டம் முதலிய திரவியத்தோடு பிரிககமுடியாதபடி ஒன்றிநிறபதறகுக காரணமாக ஸமவாயம் என்னும ஸம்பந்தத்தை நையாயிக வைஶேஷிகாகள ஒப்புககொள்ளுகிறாகள். இப்படி ஒப்புககொள்வதாகில, இந்த ஸமவாய ஸம்பந்தம அந்த திரவியத்தோடு பிரிகக முடியாதபடி ஒன்றிநிறபதறகுக காரணமாக வேறொரு ஸமபந்தத்தை ஒப்புககொள்ளவேணடும; அதறகு வேறொரு ஸமபந்தத்தை ஒப்புககொள்ளவேண்டும என்று இவ்வண்ணமாக ஸாமயத்திலேல ஒருநிலை நிலலாமற போகவேணடிவருகையாகிற அநவஸத₂ாதே₃ாஷம ஏற்படுகிறது. இனி, 'ஸமவாய ஸம்பந்தம திரவியததோடு ஒன்றிநிறபது அதன இயலவு என ஒப்புககொணடு விடலாமாகையால, அதறகாக வேறொரு ஸமபந்தத்தை ஒப்புககொள்ள வேணடாம். ஆகையால அநவஸத₂ாதே₃ாஷமவராதே எனில' ஜாதி முதலானவை திரவியததோடு ஒன்றிநிற்பது அவறறின இயலவு என்றே ஒப்புககொண்டுவிடலாமாகையால. ஸமவாய ஸமபந்தததைக கறபிககவேண்டிய அவசியமே இலலை. ஆகையால ஸமவாயததை கறபிப்பதாலும இமமதம பொருந்தாது.

सि-सू-नित्यमेव च भावात् ॥ (२-२-१३)

१७३. सम्बन्धस्यास्य नित्यत्वे सम्बन्ध्यखिलवस्तुनः ।
नित्यमेव च भावाद्धि मतमेतदसङ्गतम् ॥

सि-सू-रूपादिमत्त्वाच्च विपर्ययो दर्शनात् ॥ (२-२-१४)

---

**ஸி. ஸூ:- நித்யமேவ ச ப₄ாவாத் ॥ 2-2-13 ॥**

நித்யம ஏவ பₒாவாத ச—(ஸமவாயத்தை நித்யமாக ஒப்புக கொண்டால, அதை உடைய பொருள்களும) எப போதும இருககவேணடிவருகையாலும (அணுகாரணவாத மதம பொருந்தாது).

173. **ஸிததாந்தம்.** முன் ஸூத்ரத்தில் சொன்ன தோஷம ஸமவாயஸமபநதம் அநித்யமாயிருநதாலும பொருந்தும. நையாயிகவைசேஷிகாகள் ஸமவாய ஸம்பந்ததை நித்ய மாகவே ஒப்புக்கொளளுகிறூர்கள்; ஸம்பநத₄ம எனபது இரண்டு ஸமபநதிகளின்றியிலே ஸித்திககமாட்டாதாகை யால, ஸமபநதமான இது நித்யமாளுல். இந்த ஸமபந்தத்தை உடைய க₄டதவம் முதலான ஜாதி நித்யமாயிருபபதுபோல, க₄டம் முதலான பொருள்களும் நித்யமாகவேண்டிவரும. இது ப்ரதயக்ஷவிருததம். இககாரணத்தாலும இமமதம பொருநதாது.

**ஸி. ஸூ:- ரூபாதி₃மத்த்வாச்ச விபர்யயோ த₃ர்ஶநாத் ॥ 2-2-14 ॥**

ரூபாதி₃மதத்வாத—(பரமாணுககள்) ரூபம் முதலிய வற்றை உடைத்தாயிருககையால், விபர்யய: ச—(அணு காரணவாதிகள பரமாணுக்களுககு ஒப்புகொள்ளும நித்ய தவம, நிரவயவதவம் முதலான தன்மைகளின) எதிரத தட்டானவையே ஸிததிககும. த₃ர்ஶநாத—(க₄டம் முதலான வற்றில அபபடிக) காணகையால, (இதனாலும பொருநதாது.)

१७४. पार्थिवाद्यणुसङ्घानामेषां रूपादिमत्त्वतः।
स्यात्स्वाभिमतनित्यत्वाऽनंशित्वादिविपर्ययः॥
१७५. घटादिकेषु रूपादिमत्स्वेवं दर्शनान्नहि।
दृष्टानुसारात्कल्प्योऽर्थः स्वाभीष्टे पर्यवस्यति॥

---

*174-175.* **ஸித்தாததம** கார்யமான பூதங்களில ஸ்பர்ஶம் ரூபம், ரஸம, கநதம், என னும் குணஙகள் ப்ரத்யக்ஷமாகக காணபபடுகையால, வாயு, தேஜஸ, ஜலம, பூமி என னும நாலு பூத பரமாணுக்களான காரணபபொருள்களி லும அந்த குணங்கள் இருககின்றன என று அணுகாரணவாதிகள் ஒப்புககொள்ளுகிறார்கள். காரணபபொருளில இருநதால தானே காரயபபொருளில காணப்படும எனபது அவர்கள் கருதது. இதே முறையில, க₄டம முதலான கார்யப பொருள்களில காணப்படும அநித்யதவம, அவயவ முடைத்தாயிருககை, ஸ்தூலமாயிருககை முதலான தனமை களையும காரணபபொருளகளான பரமாணுககளில அவா கள் ஒப்புககொண்டு தீரவேண்டும. அவாகளோவெனில, பரமாணுககளை நித்யமாகவும, அவயவம றறதாகவும, ஸூக்ஷம மாகவும் ஒபபுககொள்ளுகிறார்கள். கார்யபபொருளகளில காணப்படுவதையொட்டிக காரணபபொருளில ரூபம முத லானவறறைக கலபிககும அவாகள் கொளகைப்படி பாாத தால முறகூறியபடி பரமாணுககளில நித்யதவம், நிரவய வத்வம், ஸூக்ஷ்மத்வம முதலானவறறின எதிாத்தட்டான அநித்யதவம, அவயவமுடைத்தாயிருக்கை, ஸ்தூலமா யிருக்கை ஆகியவையே ஸிததிககும. காாயமான கடம் முதலானவை அநித்யமாகவும், அவயமுடையவையாகவும், ஸ்தூலமாகவுமனறோ காணப்படுகினறன. கார்யததில் காணப்படுவதையொட்டிக் காரணததைக கற்பிக்குமபோது "சில தன்மைகளை மாத்திரமே கற்பிபபோம், மறறவறறைக கற்பிககமாட்டோம" எனறு சொலலமுடியாதே. இக் காரணததாலும் அணுகாரணவாதம் பொருந்தாது.

सि-सू-उभयथा च दोषात्॥ (२-२-१५)

१७६. उक्तानित्यत्वादिदोषभयात् रूपादिशून्यता।
अणुसङ्घे स्वीकृता चेत्कार्यं स्याद्रूपवर्जितम्॥

१७७. स्वहेतुगुणपूर्वत्वात् गुणानां कार्यवर्तिनाम्।
एतद्दोषभयात्तेषु रूपवत्त्वं यदीष्यते॥

१७८. तर्ह्यनित्यत्वादिदोषः पूर्वोक्तः प्रसजेत्ततः।
दोषादुभयथा चैवमसमञ्जसमेव तत्॥

---

**ஸி. ஸூ:- உப4யதா2 ச தோ3ஷாத் ॥ 2-2-15 ॥**

**உப4யதா2 தோ3ஷாத ச**—(பரமாணுக்களில் ரூபம் முதலானவை இல்லை என்றாலும், உண்டென்றாலும்) இரண்டு பக்ஷத்திலும் தோஷம் ஏற்படுகையாலும் (அணுகாரண மதம் பொருந்தாது.)

*176-178.* **ஸித்தாந்தம்.** முன் ஸூத்ரத்தில் கூறியபடி, கார்யங்களில் காணப்படுவதையொட்டிக் காரணமான பரமாணுக்களிலும் ரூபம் முதலானவற்றை ஒப்புக்கொண்டால் அநித்யத்வம் முதலானவையும் ஏற்படுகிறதே என்னும் பயத்தால் காரணப்பொருளான பரமாணுக்களில் ரூபம் முதலானவை இல்லை என்று கொண்டால், காரணங்களில் உள்ள குணங்களே கார்யப்பொருள்களில் ஒப்புக்கொள்ளப் படவேண்டும் என்னும் நியமத்தை ஒட்டி, காரணத்தில் இல்லாத ரூபம் முதலானவை கார்யங்களான கடம் முதலானவற்றில் இல்லாமற்போகவேண்டிவரும். ப்ரத்யக்ஷ விருத்தமான இதைத் தவிர்ப்பதற்காகக் காரணமான பரமாணுக்களில் கார்யத்தையொட்டி ரூபம் முதலானவற்றை ஒப்புக் கொண்டால், முன் ஸூத்ரத்தில் கூறியபடி அவற்றில் அநித்யத்வம் முதலானவையும் ஏற்படும். இப்படி இரண்டு பக்ஷத்திலும் தோஷமேற்படுகையாலும் அணுகாரணவாத மதம் பொருந்தாது.

सि-सू-अपरिग्रहाच्चात्यन्तमनपेक्षा ॥ (२-२-१६)

१७९. श्रुतिन्यायविरुद्धेपि कपिलस्य मते क्वचित् ।
सत्कार्यवादमुख्येऽस्ति वैदिकानां परिग्रहः ॥

१८०. केनाप्यंशेन काणादपक्षस्यास्यापरिग्रहात् ।
अनपेक्षैव कार्याऽत्रात्यन्तं मोक्षफलेप्सुभिः ॥

इति महद्दीर्घाधिकरणम् ॥

---

ஸி. ஸூ:- அபரிக்₃ரஹாச்சாத்யந்தமநபேக்ஷா
॥ 2-2-16 ॥

அபரிக்₃ரஹாத ச- (வைதிகாகளால) ஏறறுக்கொள்ளப படாமையாலும, பொருந்தாமையாலும, அதயந்தம் அந பேக்ஷா — மிகவும அநாதரிககததககது (அணுகாரணமதம்).

179-180.கபிலருடைய ஸாங்கயமதம் ஸ்வதந்த்ரப்ரத₄ான காரணவாத₃ம் முதலிய சில விஷயங்களில ஶ்ருதிகளுககும் நியாயஙகளுககும முரண்பட்டிருநதபோதிலும். 'இலலாத பொருள் உணடாக முடியாது' எனனும் ஸதகார்யவாதம், பரகருதி.மஹான்முதலான இருபததுநாலு அசேதநதத்துவங் களின எண்ணிககை முதலான சில விஷயங்களில வைதிகர்கள் அம்மதத்தைஏற்றுககொண்டிருககிறார்கள் 'ஸத்காாயவாதம' முதலானவறற ஒபபுககொள்ளாத வைஶேஷிக மததநில எந்த அம்ஶததையும வைதிகர்கள் ஏறறுக்கொள்ளவிலலை யாகையாலும், முறகூறியபடி அம்மதம முழுவதுமே பொருந்தாமலிருககையாலும. மோக்ஷபலனை விரும்புகிறவர் களால அமமதம் மிகவும் அநாதரிக்கத்தக்கதேயாகும். ஸூத்ரததிலுள்ள சகாரம் முன ஸூதரங்களிற்சொனன பொருந்தாமைகளை ஸமுச்சயிககிறது.

மஹத₃தீ₃ர்க₄ாதி₄கரணம முற்றிறறு.

समुदायाधिकरणम् ॥ (२-२-३)

सि-सू-समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्तिः ॥ (२-२-१७)

१८१. अणुकारणतावादिपक्षे पूर्वं निराकृते ।
तत्साम्योपस्थितः पक्षः सौगतानां निरस्यते ॥

१८२. चतुर्विधास्सौगतास्तेष्वाद्या वैभाषिकाख्यकाः ।
द्वितीयास्सौत्रान्तिकाख्या एषां दर्शनमीदृशम् ॥

## ஸமுதா₃யாதி₄கரணம் ॥ 2-2-3 ॥

### ஸி. ஸூ:- ஸமுதா₃ய உப₄யஹேதுகேऽபி ததப்ராப்தி: ॥ 2-2-17 ॥

உப₄யஹேதுகே ஸமுதா₃யே அபி— பரமாணுவைக் காரணமாகக்கொண்டதான பூமி முதலானவற்றின் ஸமுதாயத்திலும், பூமி முதலான பூதங்களைக்காரணமாகக் கொண்ட சரீரேந்திரிய ஸமுதாயத்திலும், தத₃ப்ராப்தி — ஸமுதாயமாகும் தன்மை சேராது.

181-182. முன் அதி₄கரணத்தில் பரமாணுக்கள் உலகிற்கு உபாதானகாரணம் என்று கூறும் நையாயிக வைசேஷிகர்களின் மதம் தள்ளப்பட்டது. இவ்வணு காரணவாதம் செய்யும் விஷயத்தில் இவர்களை ஒத்திருக்கையாலே, அடுத்தபடியாக பௌத்தர்களின் மதம் தள்ளப்படுகிறது. 1 வைப₄ாஷிகர்கள். 2. ஸௌத்ராந்திகர்கள் 3. யோகா₃சாரர்கள். 4. மாத்₄யமிகர்கள் என்று பௌத்தர்கள் நாலுவகைப்பட்டவர்கள். நாலுபேருமே புத்தசிஷ்யர்களாயினும், முன்னவரைக்காட்டிலும் பின்னவரது மதம் அதிகமான தோஷமுள்ளது.

पू १८३. गन्धादिसङ्घैरणुभिः पार्थिवाद्यैश्चतुर्विधैः ।
उत्पाद्यन्ते पृथिव्यादिसङ्घातास्तैश्च भौतिकाः ॥

"யோகா₃சாரோ ஜக₃த்₃பலபதயதர ஸௌதராநதிகஸ தத
தீ₄வைசிதாயாத அநுமிதிபத₃ம வகதி வைப₄ாஷிகஸது ।
பரத்யக்ஷம தத க்ஷணிகயதி தே ரஙக₃நாத₂ தரயோSபி
ஜ்ஞாநாதமதவக்ஷணபி₄து₃ரதே சக்ஷதே தாந க்ஷிபாம ॥"

[அரஙகநகரப்பனே! இந்த பௌததர்களுள் யோகாசார வகுப்பினன வெளி உலகை இலலெசெய்கிறன; ஸௌத ராந்திக வகுப்பினன 'பலவகைப்பட்ட அறிவுகள் உணடா வதாகிற ஹேதுவைககொணடு அநுமானத்தால் உலகம அறியப்படுவது, க்ஷணிகமாகவுமிருபபது' எனகிறன. வை பாஷிகன் என னும் வகுபபைச்சோநதவனேவெனில, 'உலகம ப்ரத்யக்ஷமாகவும க்ஷணிகமாகவுமிருப்பது' எனகிறன. இம்மூனறு வகுபபினருமே ஞானமே ஆத்மா' எனறும, 'அது கணததில அழிவதே' எனறும கூறுகிறாகள். அவர்களைத தள்ளுகிறேம] என று ஸ்ரீரங்கராஜஸ்தவததில் கூறபபட்டவர்களில க்ஷணிகமான வெளி உலகை ஒபபுக கொள்ளும் வைப₄ாஷிகனும, ஸௌதராநதிகனும் இவ்வதி கரணத்தில் தள்ளப்படுகின றனர். 'உலகமிலலை, க்ஷணிக மான ஞானமே உள்ளது' என்னும யோகாசா்ரன அடுதத அதி₄கரணததிலும், 'ஒன்றுமே இலலை' என்னும மாத்₄யமிகன அதறகடுத்த அதிகரணததிலும தள்ளபபடுகின றனர்.

*183-186**. **பூாவபக்ஷம்.** ரூபம, ரஸம, ஸ்பர்ஸம, கந்தம் என்னும் தனமைகளை உடையவை பூமிபரமாணுக்கள். ரூபம், ரஸம, ஸபாசம என னும் தனமைகளை உடையவை ஜலபரமாணுககள், ரூபம், ஸ்பர்சம் என னும தனமைகளை உடையவை தேஜ: பரமாணுககள்; ஸ்பர்ஸம் என னும் தன்மையையே உடையவை வாயுபரமாணுககள. பல பூமி பரமாணுககள் சேர்நது பூமியும, பல ஜலபரமாணுககள் சேர்நது ஜலமும பல தேஜ.பரமாணுககள் சேர்நது 'தேஜஸ்' என னும் அகனிததததுவமும், பல வாயுபரமாணுக

१८४. उत्पाद्यन्ते च सङ्घाताः बाह्यार्था एत एव हि।
आन्तरो ज्ञानसन्तानरूपो देहान्तरास्थितः॥
१८५. अहंप्रतीतिविषयः आत्मास्त्यर्थेष्वमीष्वपि।
क्षणिकेषु स्थिरत्वादिबुद्ध्याख्याविद्ययाऽखिलम्॥
१८६. उपपद्यत एवातः जगदुत्पत्तिरप्यथ।
सि युज्यते व्यवहारश्चेत्येतन्मतमसङ्गतम्॥
१८७. अणुहेतुकपृथ्व्यादिसङ्घे पृथ्व्यादिहेतुके।
देहेन्द्रियादिसङ्घे च सङ्घोत्पत्तिर्न युज्यते॥

---

கள் சேர்ந்து வாயுவும் உண்டாகின்றன. பூமி முதலான இந்த நாலு பூதங்களும் ஒன்றோடொன்று சேருவதால் தேஹம், இந்திரியங்கள் முதலான பௌதிக பொருள்கள் உண்டாகின்றன. நாம் வெளியுலகில் காணும் பொருள்கள் இப்படி உண்டானவையேயாம். தேஹத்தின் உள்ளிருக்கும் பொருளை ஆராய்ந்தால், ஜ்ஞானங்களின் தொடர்ந்த ஸமூஹமாயிருப்பதாய், 'அஹம்' என்னும் அறிவுக்கு விஷயமாயிருப்பதே உட்பொருளான ஆத்மா எனப்படுகிறது. வெளிப்பொருள்களோடு, உட்பொருளான அறிவோடு வாசியற எல்லாம் க்ஷணமாத்திரமே இருப்பவை. இவற்றை நிலையாயிருப்பவையாக மயங்குவதே அஜ்ஞானம். ஆகவிப்படி க்ஷணிகமான நான்குவகைப் பரமாணுக்களிலிருந்து க்ஷணிகங்களான நாலு பூதங்களும் அவற்றிலிருந்து க்ஷணிகங்களான தேஹேந்திரியங்களும் உண்டாவதே உலகின் உற்பத்தியாகும். உள்ளிருக்கும் க்ஷணிகஜ்ஞானத் தொடரான ஆத்மா இவற்றை ஸ்திரமென்று அறிவதால் உலகவ்யவஹாரம் ஏற்படுகிறது. ஆகையால், ஜகத்துத்பத்திக்கும், லோகவ்யவஹாரத்திற்கும் வேறு எதையும் ஒப்புக்கொள்ளத் தேவையில்லை.

*186*-190.* **ஸித்தாந்தம்.** இந்த மதம் பொருந்தாது. அணுக்களிலிருந்து பூமி முதலான பூத ஸமுதாயம் உண்டாவ

१८८. क्षणिकत्वाभ्युपगमात् अणुपृथ्व्यादिकस्य च।
कदाऽणवः क्षणध्वस्ताः व्याप्रियन्ते च संहतौ॥

१८९. भूतानि च कदा वा ते संहन्यन्तेऽथ तानि च।
कदा ते ज्ञानविषयाः यान्ति वा व्यवहार्यताम्॥

१९०. सर्वे क्षणविशिष्टाश्चेत् पदार्था, नहि युज्यते।
जगदुत्पत्तिरपि च व्यवहारश्च लौकिकः॥

---

தாகக கூறுமிடததிலும, பூமி முதலானவறறிருநது தேஹம, இநதிரியம முதலான பௌதிக ஸமுதாயம உணடாவ தாகக் கூறுமிடத்திலும், அவ்விரு ஸமுதாயங்களும உண்டாவது பொருந்தாது. ஏனெனில அணு, பூமி முதலிய அவையெலலாம க்ஷணிகமாகவனறே ஒப்புக கொள்ளபபடுகினறன. ஒரு பொருள் மற்றொனறோடு சேருமபோது முதல க்ஷணத்தில அதில கிரியை ஏறபட வேண்டும, இரணடாவது க்ஷணத்தில மறற பொரு ளோடு சேரவேணடும. மூனறாவது க்ஷணத்தில ஸமு தாய நிலையை அடையவேணடும. அணுககள் ஒனறோ டொன்று சேருமபோது முதல கணத்திலேயே அழிந்து விடுவதால. சோககைககாக அவை எபபோது தொழில புரியமுடியும்? பூதங்களும் ஒனறோடொனறு சேருமபொது முதல கணததிலேயே அழிநது விடுவதால, சோககைககாக எப்போது தொழில புரியமுடியும்? ஒரு கணததிலேயே அழியும் அவை எககணததில் க்ஷணிகமான ஞானததிறகு விஷயமாகி லோகவ்யவஹாரததை விளைகக முடியும்? ஆகவிபபடி எலலாப பொருள்களுமே கணத் திலேயே அழிபவையாக ஒப்புக்கொள்ளப்படுகையால், இம் மதத்தில உலகததின உறபததியும ஒட்டாது, லோக வ்யவஹாரமும ஒட்டாது. ஆகையால உலகின உறபதது யும, லோகவ்யவஹாரமும பொருந்துவதற்கு பரஹ்ம காரணவாததைதை ஏறறுககொணடே தீரவேண்டும.

सि-सू-इतरेतरप्रत्ययत्वादुपपन्नमिति चेन्न सङ्घातभावानिमित्तत्वात् ॥
(२-२-१८)

१९१. अविद्या विपरीता धीः तया संस्कारशब्दिताः।
रागद्वेषादयश्चैवमविद्यादिपरम्परा ॥

**ஸி. ஸூ:- இதரேதர*ப்ரத்யயத்வாதுபபந்நமிதி சேந்ந ஸங்காதபாவாநிமித்தத்வாத் ॥ 2-2-18 ॥**

**இதரேதர *ப்ரத்யயத்வாத்**—(அவித்யை முதலானவையும் பூமி முதலானவையும் சக்கரம் போலே சுழன்று) ஒன்றுக்கொன்று * காரணமாயிருக்கையாலே, **உபபந்நம்**—(ஸமுதாயமாகும் தன்மை) பொருந்தும். **இதி சேத்**—என்னில், **ந**—பொருந்தாது; **ஸங்காதபாவாநிமித்தத்வாத்** — (அவித்யை முதலானவை பூமி முதலானவற்றின்) ஸமுதாயமாகும் தன்மைக்குக் காரணமாகமாட்டாவாகையால்.

*191-*193.* **பூர்வபக்ஷம்.** அநாதியாய் வரும் கார்யகாரண பரம்பரையை ஆராய்ந்தால் முன் ஸூத்ரத்தில் சொன்ன தோஷம் ஏற்படாது. க்ஷணிகப் பொருள்களை நிலையாக நினைக்கும் அவித்யை என்னும் விபரீதஜ்ஞானத்திலிருந்து ஸம்ஸ்காரங்கள் என்னப்படும் ராகம், த்வேஷம் முதலானவை ஏற்படுகின்றன. சரீரம் முதலானவை நிலையானவை என்னும் எண்ணத்தால் அவற்றில் ராகமும், அவற்றுக்குத் தீங்கு செய்வாரிடம் த்வேஷமும் ஏற்படுவதைக் காண்கிறோமன்றோ. அந்த ராகம் தொடர்வதால் சித்த ரூபமான ஆத்மா தாயின் கர்ப்பத்தில் நுழைந்து, அங்கு 'நான்' என்னும் அஹங்காரத்தைப் பெற்று, புதிதாக உண்டாகும் சரீரத்திற்கு வேண்டிய ஸாரத்தை, வீர்யம், ஸ்ம்ருதி ப்ரீதி முதலிய சைதந்யங்களைப் பெற்று அதனாலே பூமி முதலான தாதுக்கள் சேரப் பெற்று ஆறு இந்திரியங்களைப் பெற்று, ப்ராணன், தேஹம், இந்திரியம் முதலானவற்றின

* பௌத்த மதத்தில் ப்ரத்யய சப்தம் காரணத்தைச் சொல்லும்.

१९२. अन्योन्यमूलाऽनादिश्च चक्रवत्परिवर्तते ।
भूतभौतिकसङ्घातं विनैतन्नोपपद्यते ॥

१९३. अतस्सङ्घातभावाद्यमुपपन्नमिहेति चेत् ।
नैवमेतदविद्यादेः सङ्घातत्वादिकं प्रति ॥

१९४. अनिमित्तत्वतोऽविद्या स्थिरताबुद्धिरस्थिरे ।
क्षणिकस्य हि नार्थस्य भजेत् संहतिहेतुताम् ॥

१९५. शुक्तिरूप्यत्वबुद्धिर्हि न शुक्त्याद्यर्थसंहतेः ।
हेतुस्स्यात् किञ्च यस्य स्यात् क्षणिके स्थिरतामतिः ॥

---

ஸமுதாயமாய் ஸங்காதமெனப்படும் உடம்பாகி, மறுபடியும் அவித்யையை அடைந்து இப்படியே சக்கரம்போல ஒன்றுக்கொன்று காரணமாகச் சுழன்று சுழன்று வருகிறது. பூ$_4$தஸமுதாயமும், பௌ$_4$திகமான சரீரேந்திரிய ஸமுதாயமும் ஏற்படாமல் இந்தச் சக்கரம் ஓடாது. ஆகையால் பூ$_4$த பௌ$_4$திக ஸமுதாயம் ஏற்படுவதும், லோகவ்யவஹாரமும் பொருந்திவிடுகிறது. ஆகையால் சென்ற ஸூத்ரத்தில் சொன்ன தோஷம் பௌத்தமதத்தில் ஏறாது.

193*-*196. **ஸித்தாந்தம்.** இப்பூர்வபக்ஷம் தவறு. அவித்யை முதலானவை பூ$_4$தபௌ$_4$திகங்கள் ஸமுதாயமாவதற்குக் காரணமாகவேமாட்டா. நிலையில்லாத பொருள்களை நிலையென நினைக்கும் விபரீதஜ்ஞானம் க்ஷணிகமான பொருள்கள் ஒன்றோடொன்று சேர்வதற்கு எப்படிக் காரணமாக முடியும்? கிளிஞ்சலை வெள்ளியென்று அறியும் மயக்கம் கிளிஞ்சல் முதலான பொருள்களின் சேர்க்கைக்குக் காரணமாக முடியுமோ? மேலும், எவன் க்ஷணிகப் பொருளை நிலையாக நினைக்கிறானோ அவன் அக்கணத்திலேயே அழிந்து விட்டானாகையால் ராகம் முதலானவை அவனுக்கு எப்படி ஏற்படமுடியும்? ஆகையால் பௌத்த மதம் பொருந்தாது.

१९६. स नदैव नस्त इति कस्य रागादिकं भवेत्।
सि-सू-उत्तरो पादे च पूर्वनिरोधात॥ (२-२-१९)
परक्षणोत्पत्तिकाले पूर्वक्षणविनाशनः॥
१९७. परक्षणं प्रत्येतस्य हेतुत्वानुपपत्तितः।
न स्याद्विश्वोत्पत्तिरस्मिन् क्षणिकत्वमते ध्रुवम्॥
१९८. अभावस्यैव हेतुत्वे सर्वं सर्वत्र सर्वदा।
उत्पद्यताऽथ पूर्वत्र वर्तिनोऽस्यैव हेतुना॥

---

ஸி. ஸூ- உத்தரோத்பாதே₃ ச பூர்வநிரோத₄ாத்
॥ 2-2-19 ॥

உததரோத்பாதே₃—பின க்ஷணம் உண்டாகும் வேளை யில. பூாவநிரோத₄ாத ச—முன க்ஷணம் அழிநதுவிடுவதாலும் (பௌததமதம பொருநதாது.)

196*-*199. பின க்ஷணம் உணடாகும வேளையில முன க்ஷணம அழிநது விடுகிறதானபடியால. முன க்ஷணம பின க்ஷணததிறகுக காரணமாக முடியாது ஆகையால 'எலலாம க்ஷணிகம' எனனும பௌததமததில உலகின உறபத்தி ஒட்டாது. முன க்ஷணததின அபூாவமே பின க்ஷணததிறகுக காரணம எனில: அந்த அபூாவம் அநத க்ஷணம அநத இடம் தவிாந்த எலலாக் காலஙகளிலும எலலாவிடஙகளிலும இருககையால. எலலாப பொருள்களும எலலா இடஙகளிலும் எலலாக காலங்களிலும உணடாகவேண்டிவரும. இதைத தவிாபபதறகாகக காாயத்துககு முன க்ஷணத்திலிருபபது மாததிரமே அதறகுக காரணம எனில: ஒரு கடக்ஷணம அதறகு அடுத்த கணததிலுளள பசு எருமை. கல முதலான எலலாப பொருள்களுககும காரணமாகவேண்டிவரும. இதைத தவிாபபதற்காக முன க்ஷணத்திலிருபபதாய், காா்யததோடு ஒரே ஜாதியை உடையதே அதறகுக் காரணமாகமுடியும்

१९९. कश्चित् घटक्षणो हेतुः स्याज्ज्ञानोत्तरभाविनाम्।
सि-सू-असति प्रतिज्ञोपरोधो यौगपद्यमन्यथा॥ (२-२-२०)
असत्यपि च हेतौ तत् कार्यमुत्पद्यते यदि॥
२००. ज्ञानोत्पत्तावधिपतिसहकार्यादिकस्य च।
कारणत्वप्रतिज्ञायाः विरोधश्चापि संभवेत्॥

---

எனில ஒரு கணததிலுளள க₄டம அடுதத கணததிலுள்ள எலலா கடஙகளுககும காரணமாக வேணடிவரும. இதைததவிரப்பதறகாக ஓர் உததரக₄டக்ஷணததிறகு ஒரு பூரவக₄டக்ஷணமே காரணமெனில, அபபோதும எந்த ஒரு க₄டததிறகு எந்த ஒருக₄டம காரணம எனறு நிரணயிகக முடியாதாகையாலே பொருநதாது இதைநதவிரபபதறகாக எந்த தேசததில ஒரு க₄டக்ஷணம் உளளதோ, அது அதே தேசததில உள்ள அடுதத க₄டக்ஷணததிறகுக காரணம எனில: இபபடிக கொணடால தேசம நிலையானது எனறு ஒபபுககொணடதாகிறபடியால 'எலலாம க்ஷணிகம' எனனும பௌத்தமதம அழிநதது. ஆகையால, எவவகையி லும பௌததமதம பொருநதாது.

**ஸி. ஸூ:- அஸதி ப்ரதிஜ்ஞோபரோதே₄ா யௌக₃பத்₃யமந்யதா₂ா || 2-2-20 ||**

**அஸதி**—(காரணம) இலலாமலிருககுமபோது (காரய முணடாகுமானால), **பரதிஜ்ஞோபரோத₄**—(அதி₄பதி முத லானவை ஞானமுணடாகக காரணமாகினறன) எனனும பௌத₃த₄மத பரதிஜ்ஞை விரோதிககும. **அநயத₂ா**-இநத பரதிஜ்ஞை விரோதிககாமைககாகக காரணம இருககும போதே கார்யம உண்டாகிறது எனில **யௌக₃பத₃யம**— காரயகாரணங்கள் ஒரேசமயத்தில தோற்றமளிககவேணடும

199*-*202. முன ஸூதரஙகளில சொனன தோஷங் களைத் தவிரபபதற்காகக காரணமிலலாமலே கார்யம உணடா கிறது எனறு ஒப்புககொணடால, அதி₄பதி, ஸஹகாரி முதலானவற்றை ஞானம உணடாகக காரணமாக பௌதத மதத்தில பரதிஜ்ஞை செயதிருபபது ஒடடாமறபோய்விடும.

२०१. प्रतिज्ञाऽनुपरोधाय निष्ठन्त्येकघटक्षणे ।
घटक्षणान्तरोत्पत्तिः इष्यते भवता यदि ॥
२०२. यौगपद्येनोपलब्धिः कार्यकारणयोर्भवेत् ।
सि-सू-प्रतिसंख्याऽप्रतिसंख्यानिरोधाप्राप्तिरविच्छेदात् ॥ (२-२-२१)
विनाशश्च द्विधा प्रोक्तः स्थूलसूक्ष्मप्रभेदतः ॥

---

இந்த ப்ரதிஜ்ஞைக்கு முரண்படாமைக்காகக் காரணம் இருந்தே காரியம் உண்டாகிறது என்னில், இருந்தது அழிய இடமில்லாமையாலே காரியமும் காரணமுமான இரண்டு க₄டங்கள் ஒரே சமயத்தில் காணப்படவேண்டிவரும். இப்படிக் காணப்படவில்லை. ஆகையால் பௌத்தமதம் பொருந்தாது.

**ஸி. ஸூ:- ப்ரதிஸங்க்₂யாऽப்ரதிஸங்க்₂யாநிரோதா₄ப்ராப்திரவிச்சே₂தா₃த் ॥ 2-2-21 ॥**

**ப்ரதிஸங்க₂யாऽப்ரதிஸங்க₂யாநிரோத₄ாப்ராப்தி**.—காணப்படும் (ஸ்தூ₂ல) விநாசமும், காணமுடியாத (ஸூக்ஷ்ம) விநாசமும் (உலகிற்கு) ஏற்படமாட்டா; **அவிச்சே₂தா₃த**—(உள்ள பொருள் அடியோடு) இல்லாமற்போவது ஒட்டாதாகையால்.

202-205 முன் ஸூத்ரம் வரையில் இல்லாதபொருளிலிருந்து உள்ள பொருள் உண்டாகிறது என்னும் அஸத்காரியவாதம் தள்ளப்பட்டது. உள்ள பொருள் அடியோடு இல்லாமற்போவதும் ஒட்டாது என்று இந்த ஸூத்ரத்தில் நிரூபிக்கப்படுகிறது. ஸங்க்₂யா ஶப்தம் அறிவைக்குறிக்கும்; இங்கு ப்ரத்யக்ஷத்தைக் குறிக்கிறது; ப்ரதி ஶப்தம் எதிர்த்தட்டைச் சொல்லும். நிரோத₄ ஶப்தம் விநாசத்தை உரைக்கும்; ஆகையால், ப்ரதிஸங்க₂யாநிரோத₄ ஶப்₃த₃ம் உள்ள பொருள் ப்ரத்யக்ஷமாகக் காணும்படி அடியோடு இல்லாமற்போவதாகிற நிரந்வயவிநாசத்தை பௌத்தமதக

२०३. आद्योऽयमुपलब्ध्यर्हः घटादौ दण्डताडिते ।
अन्त्यः प्रतिक्षणोद्भावी तदनर्हौ निरन्वयौ ॥
२०४. न स्यातां तौ विनाशादिधर्मभाग्वस्तुनस्सदा ।
अविच्छेदात् घटादौ चावस्थान्तरसमन्विते ॥

---

தில் சொல்லுகிறது. ப்ரத்யக்ஷமாகக் காணத்தகாததாயிருக்கும் நிரவயவிநாஶம் அப்ரதிஸங்க$_2$யா நிரோத$_4$ஶப்தத்தால் கூறப்படுகிறது. இவ்விரண்டுக்கும் உத$_3$ாஹரணம்:— க$_4$டம் முதலானவற்றைத் தடியால் அடிக்கும்போது ஏற்படும் விநாஶம் ஸ்தூலமாயிருக்கையாலே, ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறது. இது ப்ரதிஸங்க$_2$யாநிரோத$_4$த்திற்கு உத$_3$ாஹரணம்; இரண்டாவதற்கு உதாஹரணமாவது.— அந்த கடம் இப்படித் தடியால் அடிக்கப்படுவதற்கு முன்னமே ஒவ்வொருக்ஷணமும் நசித்து அதைப்போன்ற மற்றொரு க$_4$டம் அடுத்த க்ஷணத்தில் உண்டாவதாகவும், இவ்விநாஶம் ஸூக்ஷ்மமானதாகையாலே ப்ரத்யக்ஷமாகக் காணத்தகாதது என்றும் க்ஷணிகத்வாதிகளால் ஒப்புக்கொள்ளப்படுமதேயாம். இவ்விரண்டுவிதமான நிரந்வயவிநாஶமும் ஏற்படமாட்டா. க$_4$டம் முதலான பொருள்கள் அழியும்போது, எப்போதும் அவை கபாலம் முதலான வேறு நிலைகளை அடைகின்றனவேயொழிய அடியோடு அழிவதில்லை, ஆகையால் அழியும் எந்த இடத்திலும், ஒரு பொருள் மற்றொரு நிலையை அடைவதாகிற ஸாந்வய விநாஶத்தை ஒப்புக்கொள்ளலாமேயொழிய, அப்பொருள் அடியோடு அழிவதாகிற நிரந்வயவிநாஶத்தை ஏற்கமுடியாது. இவ்விஷயம் முன் பாதத்தில் ஆரம்ப$_4$ணாதி$_4$கரணத்தில் நிரூபிக்கப்பட்டது. இனி, "விளக்கு அணையும்போது உள்ளதான விளக்கு அடியோடு அழிவதைக் காண்கிறோம். பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீர்த்துளி விழுந்தால், அதுவும் அடியோடு அழிவதைக் காண்கிறோம். இவற்றைக்கொண்டு மற்ற பொருள்களும் ஒவ்வொருக்ஷணமும் அடியோடு அழி

२०५. निरन्वयविनाशस्यादर्शनादेवमेव तु।
दीपनिर्वाणेऽपि सूक्ष्मावस्थासंप्राप्तिरिष्यते॥
सि-सू-उभयथा च दोषात्॥ (२-२-२२)

---

கின்றன என்று அநுமானம் செய்கிறோம்" என்று க்ஷணிக வாதிகள் கூறுவார்களாகில், "கடம், பொற்குடம் முதலானவை அழியும்போது முறையே அவை ஓடுகள், பொற்கட்டி முதலானவையாக ஆவதைக் காண்கிறோமே யொழிய, அடியோடு அழிவதைக் காண்பதில்லை; அது போலவே விளக்கு அணையும்போதும் அது ஸூக்ஷ்மதேஜஸ் ஸாக மாறுவதாகவும், பழுக்கக்காய்ச்சிய இரும்பில் விழுந்த நீர்த்துளி ஸூக்ஷ்மமான நீராவியாக மாறுவதாகவும் அநுமானம் செய்யலாம்; ஆகையால் நிரந்வயவிநாசத்தை ஒப்புக்கொள்ளவேண்டியதில்லை" என்று பதில் கூறுகிறோம். காண்பதையொட்டிக் காணாததைக் கற்பிப்பது தக்கது; காணாததையொட்டிக் காண்பதைத் தள்ளுவது தகாதது. மேலும், க₄டம், குண்ட₃லம் முதலான ஆயிரக்கணக்கான இடங்களில் பொருள்கள் அழியும்போது வேறுநிலையை அடைவதையே காண்கிறோமாகையால், அதையொட்டி அப்படிக் காணாத ஒரு சில இடங்களிலும் அநுமானம் செய்வது நியாயமேயொழிய, காணாத ஒரு சில இடங்களை யொட்டிக் கண்ணால் காணும் பலவாயிரமிடங்களை வேறு படுத்தப்பார்ப்பதால் நியாயவிரோத₄மும், கௌ₃ரவம் என்னும் தோ₃ஷமும் ஏற்படும். ஆகையால், பௌத்தர்களால் கற்பிக்கப்படும் ப்ரதிஸங்க்₂யாநிரோத₄ம் அப்ரதிஸங்க்₂யா நிரோத₄ம் எனப்படும் இருவிதமான நிரந்வயவிநாசங்களும் ஒட்டாவாகையாலே, உள்ள பொருள் அடியோடு அழிய முடியாது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

**ஸி. ஸூ:- உப₄யதா₂ ச தோ₃ஷாத் ॥ 2-2-22 ॥**

**உப₄யதா₂** — இல்லாத பொருளிலிருந்து உள்ள பொருள் உண்டாகிறதென்றும், உள்ள பொருள் இல்லாததாகிவிடுகிற தென்றும் கூறும் இரண்டு வாதங்களிலும், **தோ₃ஷாத் ச** — தோ₃ஷம் ஏற்படுகையாலும் (பௌத்தமதம் பொருந்தாது.)

२०६. जातस्य तुच्छतापत्तौ तुच्छाच्चोत्पत्तिवर्णने।
दोषापत्तेरुभयथा ते न स्यातां हि सर्वथा॥
२०७. तुच्छादुत्पत्तिवादे हि कार्यं तुच्छात्मकं भवेत्।
यस्मादुत्पद्यते यच्च तत् तदात्मकमेव हि॥
२०८. मृत्सुवर्णादिकार्यं हि दृश्यते तन्मयं यथा।
जातस्य तुच्छतापत्तौ जगत्तुच्छात्मकं भवेत्॥
२०९. तच्च तुच्छात्मकं नाङ्गीक्रियते न प्रमीयते।
तस्मादुभयथा दोषादिदं मतमसङ्गतम्॥

---

206-209. பௌத்த மதத்தில் உண்டான பொருள் இல்லாததாகிவிடுகிறது என்றும், இல்லாததிலிருந்து உள்ள பொருள் உண்டாகிறது என்றும் ஒப்புக்கொள்ளும் இரண்டு வாதங்களிலும் தோஷம் ஏற்படுகிறதாகையால் அவ்வாதங்கள் எவ்வகையிலும் பொருந்தமாட்டா. எப்படியெனில்: சூன்யத்திலிருந்து ஒரு பொருள் உண்டாகிறது எனில், உண்டான அப்பொருளும் சூன்யமாகவே இருக்கவேண்டி வரும். ஏனெனில், உலகில் காரணப்பொருள் எவ்வுருவானதோ அவ்வுருவாகவே கார்யப்பொருள் இருப்பதைக் காண்கிறோம். மண்ணாலான குடம் மண்ணுருவாகவே யிருப்பதையும், தங்கத்தாலான குண்டலம் பொன்மயமாகவே இருப்பதையும் காண்கிறோமன்றோ. ஆக, சூன்யத்திலிருந்துண்டான உலகம் சூன்யமென்றே கொள்ளவேண்டிவரும். உலகமோ சூன்யமாகக் காணப்படவில்லை. மாத்4யமிகனை யொழிந்த பௌத்தர்கள் உலகம் சூன்யம் என ஒப்புக்கொள்வதுமில்லை. (எல்லாம் சூன்யமெனும் மாத்4யமிக பக்ஷம் அடுத்ததற்கடுத்த அதி4கரணத்தில் நிரஸிக்கப்பட்டிருக்கிறது.) உள்ள பொருள் அடியோடு அழிகிறது என்னும் வாதத்திலும், ஒரு கணத்திற்குமேல் உலகம் முழுவதும் அடியோடு அழியவேண்டிநேரிடுகையாலே சூன்யமாகவே ஒப்புக்கொள்ளவேண்டி வருகிறது. ஆக, இவ்விரு வாதங்களிலும் உலகை சூன்யமாக ஒப்புக்கொள்ளவேண்டி வருகையாலே பௌத்தமதம் பொருந்தாது.

सि-सू-आकाशे चाविशेषात् ॥ (२-२-२३)

२१०. तुच्छस्वरूपताऽऽकाशे न संभवति तत्र च।
अबाधितप्रतीतिर्यत् पृथिव्यादाविवास्ति नः॥

---

**ஸி. ஸூ:- ஆகாஶே சாவிஶேஷாத் ॥ 2-2-23 ॥**

**ஆகாஶே ச**-ஆகாஶவிஷயத்திலும் (ஶூந்யமென்னுமுடைவாதம் பொருந்தாது.) **அவிஶேஷாத்**-(பூமி முதலானவற்றைப்போல ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகையில்) வாசியில்லாமையால்

210-*211. காணப்படும் பூமி முதலானவை ஶூந்யமாக மாட்டா என்று முன் ஸூத்ரத்தில் நிரூபிக்கப்பட்டது. பூமி முதலானவற்றைப்போலே, வேறு ப்ரமாணத்தால் தள்ளப்படாமல் ப்ரத்யக்ஷத்தால் காணப்படுவதாயிருக்கை யாலே ஆகாஶமும் ஶூந்யமாகமாட்டாது என்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. ஆகாஶம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படு கிறதோ? எனில் 'இவ்விடத்தில் பருந்து பறக்கிறது, இவ்விடத்தில் கழுகு பறக்கிறது" என்று பருந்து கழுகு முதலானவை பறக்குமிடமாக ஆகாசம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறதன்றோ. பூமி முதலானவற்றின் அபா$_4$வமே (இன்மையே) ஆகாஶம் என்றும் கூறமுடியாது. எப்படி யெனில் அபா$_4$வமானது (1) ப்ராக$_3$பா$_4$வம் (2) ப்ரத்$_4$வம்ஸாபா$_4$வம் (3) அந்யோந்யாபா$_4$வம் (4) அத்யந்தா பா$_4$வம் என்று நாலு வகைப்படும். ஒரு பொருளின் ப்ராக$_3$ பா$_4$வம் என்பது அப்பொருள் உண்டாவதற்கு முற்காலத்தி லிருப்பது, அதன் ப்ரத்$_4$வம்ஸாபா$_4$வம் என்பது அது அழிந்ததற்குப் பிற்காலத்திலிருப்பது. அப்பொருளிருக்கும் போது இவ்விரண்டு அபா$_4$வங்களும் இருக்கமுடியாது. ஆகாஶத்தை பூமி முதலானவற்றின் ப்ராக$_3$பா$_4$வமாகவோ, ப்ரத்$_4$வம்ஸாபா$_4$வமாகவோ கொண்டால், பூமி முதலானவை இருக்கும்போது ஆகாசம் இல்லாமற்போகவேண்டி வரும்.

२११. पतत्यत्र श्येन इति तदाधारत्वतोऽनिशम् ।

இது ப்ரதயக்ஷவிருத்தம். ஆகையால ஆகாஶம பூமி முதலானவறறின பராக3ப4ாவப்ரத4வமஸாப4ாவஙகளாயிருக்க முடியாது. இனி, க4டம படம் என்னும இரு பொருளகளிடையே அநயோந்யாப4ாவததை எடுத்துககொண்டால, க4டததின அந்யோந்யாப4ாவம படத்திலும. படத்தின அநயோந்யாப4ாவம் க4டத்திலும உள்ளது. வேறு இடஙகளில இவ்வப4ாவம் இருக்கமாட்டாது. ஆகாசததை இரு பொருள்களின் அந்யோந்யாப4ாவமாக ஒபபுககொண்டால அவ்விருபொருள்களிடையே ஆகாஶம இருக்கமுடியாது. இதுவும பரதயக்ஷவிருததம. கடைசியாக அதயந்தாப4ாவம என்பது ஒரு பொருள் அடியோடு இல்லாமலிருக்கும்போது ஏறபடுவது பூமி முதலானவை இருக்கும்போது அவையிருககுமிடத்திலேயே நாம் ஆகாசததைக் காண்கையால, ஆகாஶமானது அவற்றின அத்யநதாப4ாவமாகவுமாகமுடியாது. இவ்வணணமாக நையாயிக மத ரீதியில அப4ாவததை ஒபபுககொண்டாலும் ஆகாஶம பூமி முதலானவறறின அப4ாவமாக ஆகமுடியாதென அறியலாம். உண்மையில, ஒரு பொருளின அப4ாவம் எனபது உள்ளதான பொருளொன்றின நிலையாகவே நிரூபிககப்படுகிறது உதா3ஹரணமாக, க4டத்தின ப்ராக3ப4ாவமானது அதன் முன நிலையான மண்கட்டியாகவும். ப்ரத்4வம்ஸாப4ாவமானது அதன பின நிலையான ஓடுகளாகவும. க4டததின அநயோந்யாப4ாவம படமாகவும். படத்தின அந்யோநயாப4ாவம க4டமாகவும, 'பூமியில கடம் அடியோடு இலலை எனறவிடததில க4டததின அத்யந்தாப4ாவம் பூமியாகவும அறியபபடுகிறது. ஆகையால பூ4மி முதலானவறறின அப4ாவமாகவே ஆகாஶமானுலும். அது பரத்யக்ஷமாகக காணபபடும் ஒரு பொருளாகவே ஆகமுடியும். ஆகவிபபடி பூமி முதலானவறறைப போலே ப்ரதயக்ஷமாகக் காணப்படுகையில வாசியிலலாமையாலே, ஆகாஶமும் சூந்யமாகமாட்டாது.

सि-सू-अनुस्मृतेश्च ॥ (२-२-२४)
प्रत्यभिज्ञानतोप्येवमर्थक्षणिकता नहि ॥
२१२. तदेवेदमिति ज्ञानमतीताद्यवगाहनात् ।
कालद्वयविशिष्टं च वस्त्वेकं सूचयत्यतः ॥
२१३. अस्थिरत्वे पदार्थस्य प्रत्यभिज्ञा न सङ्गता ।
समानं दूषणं प्रोक्तं बाह्यार्थास्तित्ववादिनोः ॥

---

**ஸி. ஸூ:- அநுஸ்ம்ருதேஶ்ச ॥ 2-2-24 ॥**

**அநுஸ்ம்ருதே: ச**—*(முன் அநுபவிக்கப்பட்ட பொருள்கள்) மறுபடியும் அநுபவிக்கப்படுகையாலும் (பொருள்கள் க்ஷணிகமாகமாட்டா.)*

*211*-213.* *இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று காலம் மூவகைப்படுகிறது. அதில் 'அன்று கண்டதை இன்று காண்கிறேன்' முதலானவிடங்களில் ஒரு காலத்தில் இருந்ததை மற்றொரு காலத்தில் அநுபவிக்கையாகிற ப்ரத்யபி₄ஜ்ஞாரூபமான ஜ்ஞானம் காணப்படுகிறது. இப்ரத்யபி₄ஜ்ஞையிலிருந்து, இருவேறு காலங்களிலிருந்த பொருள் ஒன்றே என்று நிரூபிக்கப்படுகிறது. பொருள்கள் க்ஷணிகமானால், கணந்தோறும் வேறுவேறு பொருள்கள் உண்டாக வேண்டுமாகையால் இருவேறு காலங்களிலிருக்கும் பொருள் ஒன்றே என்றறியும் இப்ரத்யபிஜ்ஞை ஒட்டாமற்போய்விடும். ஆக இதுவரையில் வெளிப்பொருள்கள் க்ஷணிகமாக உள்ளன என்று ஒப்புக்கொள்ளும் வைபா₄ஷிகஸௌத்ராந்திகர்களுக்குப் பொதுவான தூஷணங்கள் நிரூபிக்கப்பட்டன. அடுத்த ஸூத்ரத்தில் 'வெளிப்பொருள்கள் அநுமானத்தாலேயே அறியப்படுபவை' என்று கூறும் ஸௌத்ராந்திகனுக்கே உரிய தூஷணம் நிரூபிக்கப்படுகிறது.*

सि-सू-नासतोऽदृष्टत्वात् ॥ (२-२-२५)

२१४. ज्ञानोत्पत्तिक्षणेऽर्थस्यानवस्थानान्न कस्यचित् ।
अर्थस्य धीविषयता स्यादिति प्राक् यदीरितम् ॥

२१५. तत्रानुमेयार्थवादी प्राह सौत्रान्तिकः परः ।
न ज्ञानविषयत्वेऽत्र वस्तुसत्तैव कारणम् ॥

२१६. वस्तुनो धीविषयता यतस्तद्धेतुतात्मिका ।
विज्ञाने नीलपीतादिविचित्राकारदर्शनात् ॥

२१७. पूर्वं समर्प्य स्वाकारं विज्ञाने तदनन्तरम् ।
स्वयं विनष्टो नीलादिरर्थः पुसाऽनुमीयते ॥

---

**ஸி. ஸூ:- நாஸதோऽத்₃ருஷ்டத்வாத் ॥ 2-2-25 ॥**

அஸத ந—(அறிவில உள்ள நீலம முதலான தனமை) அழிநத பொருளுடையதாகமுடியாது. அத₃ருஷடத்வாத— (பொருள் அழிநதபின அதன் தன்மை மறறொரு பொருளில ஸங்கரமிபபது) எங்கும காணபபடுவதிலலை யாகையால.

214-218. பூாவபக்ஷம். பொருள்களை க்ஷணிகமாக ஒப்புககொணடால். எபபொருளும அதைபபறறிய அறிவுணடாகும அடுதத கணத்தில இருககமுடியாதாகையால, எப்பொருளுமே அறிவுககு விஷயமாக முடியாது எனறு பௌததமததினமேல ஒரு தோஷம கூறபபடுகிற தனறோ, அதறகு ஸௌதராநதிகர்களாகிற நாஙகள் பின வருமாறு ஸமாதானம உரைககிறோம.— அறிவுண்டாகும கணத்தில ஒரு பொருள இலலாமலிருப்பதால அப் பொருள் அறிவுககு விஷயமாகமாட்டாது எனறு கூற முடியாது, ஒரு பொருள் உள்ளதாயிருபபதாலேயே அது அறிவுக்கு விஷயமாகி விடாது. அறிவுககு விஷயமாகை யாவது.- அறிவுண்டாவதறகுக காரணமாகையேயாகும;

२१८. यतोऽर्थकृतमेवैतत् ज्ञानवैचित्र्यमित्यमत् ।
ज्ञाने नीलादिराकारः लभ्यते यः स नार्हति ॥
२१९. आकारो भवितुं नष्टस्यार्थस्यैवमपि क्वचित् ।
नष्टे धर्मिण्यदृष्टत्वात् धर्मस्यान्यत्र सङ्गतेः ॥

அறிவுண்டாவதற்குக் காரணமாயிருக்கும் பொருள் அறிவையுண்டாக்கிவிட்டுத் தான் அழிந்துபோவதில் தடையில்லையே; அறிவுண்டாவதற்குக் காரணமாயிருக்கையே அறிவுக்கு விஷயமாகையெனில், அறிவுண்டாவதற்குக் காரணமான கண்முதலான இந்திரியங்களும் அறிவுக்கு விஷயமாகவேண்டிவருமேயெனில்: தன் ஆகாரத்தை அறிவில் ஸமர்ப்பிப்பதன் மூலம் எது அறிவுண்டாவதற்குக் காரணமாகிறதோ அதுவே அறிவுக்கு விஷயமாவது என்று கொள்ளுகிறோமாகையாலே, அறிவில் தம் ஆகாரத்தை ஸமர்ப்பிக்காத கண் முதலானவை அறிவுக்கு விஷயமாகாதவையாயிருப்பதில் குறையில்லை. ஆக, அறிவில் தன்னுடைய நீலம், மஞ்சள் முதலான ஆகாரங்களை ஸமர்ப்பித்து அழிந்துபோன நீலகுடம் முதலானவை அறிவிலுள்ளதாகக் காணப்படும் விசித்திரமான அவ்வாகாரங்களைக் கொண்டு அநுமானித்து அறியப்படலாமாகையால், க்ஷணிகமான பொருள்களும் அறிவுக்கு விஷயமாவதில் குறையில்லை. நீலம் முதலான ஆகாரங்களற்ற அறிவில் காணப்படும் நீலம் முதலான விசித்திரமான ஆகாரங்கள் அவ்வாகாரங்களையுடைய பொருள்களால் ஸமர்ப்பிக்கப்படுவதாகக் கொண்டால்தான் பொருந்துமாகையால் எங்கள் மதமே சரியானது.

*218-220. ஸித்தாந்தம்— இப்பூர்வபக்ஷம் தவறு. அறிவில் காணப்படும் நீலம் முதலான விசித்திரமான ஆகாரங்கள், ஏற்கனவே அழிந்துபோன பொருள்களின் ஆகாரங்களே என்று கூறுவது எவ்வகையிலும் பொருந்தாது.

२२०. जपापुष्पे विनष्टे हि लौहित्यं स्फटिके कुतः।
धीवैचित्र्यमतोऽर्थस्य क्षणिकत्वे न संभवेत्॥

सि-सू-उदासीनानामपि चैवं सिद्धिः॥ (२-२-२६)

२२१. क्षणिकत्वे पदार्थानां निष्प्रयत्ननृणामपि।
सर्वार्थसिद्धिस्स्यादेव प्रयत्नाद्यनुतिष्ठतः॥

---

ஒரு பொருள் அழிந்துபோய் விட்டபின்பு அதன் த₄ர்மம் வேறொரு பொருளில் சேர்ந்து காணப்படுவதென்பது உலகில் எங்குமே கிடையாது. ஜபாகுஸுமம் என்னும் செம்பருத்திப் புஷ்பம் ஸ்படிகக்கல்லில் பிரதிபலிப்பதையும், கண்ணாடியில் முகம் பிரதிபலிப்பதையும் காண்கிறோம். அப்புஷ்பமோ, அமமுகமோ அந்தஸ்படிகம் அல்லது கண்ணாடியின எதிரில் இருக்கும்போதுதான் அவற்றில அவ்வ பிரதிபலிககின்றன. விலகிச் சென்ற பினபோ அழிந்தபின்போ அவை பிரதிபலிப்பதில்லை, இருக்கும்போதும் புஷ்பம் முகம் முதலானவற்றின் சிவப்பு முதலான ஆகாரங் கள் மாத்திரம் பிரதிபலிபபதுமில்லை, அவ்வாகாரங்களோடு கூடிய புஷ்பம் முதலிய பொருள்களே அவையிருககும்போது பிரதிபலிககினறன. ஆகையால் பொருள்கள் அழிந்தபின்பு அவறறின ஆகாரங்கள் மாததிரம் அறிவில ஸமாப்பிக்கப் பட்டுப் பிரகாசிககினறன என்று கூறுவது ஒட்டாது. ஆகையால், பொருள்கள் க்ஷணிகமெனனும் பௌதத மததகிலவிசிததிரமான அறிவுகள ஏறபடுவது பொருந்தாது.

ஸி. ஸூ:-உதா₃ஸீநாநாமபி சைவம் ஸித்₃தி₄:॥2-2-26॥

ஏவம்-இவ்வண்ணமாகப் பொருள்கள் க்ஷணிகமானவை எனக்கொண்டால், உதா₃ஸீநாநாம் அபி-முயறசி செய்யாத வர்களுக்கும், ஸித்₃தி₄-விலவப்பொருள்களும் ஸித்திக்க வேண்டிவரும (என்னும் தோஷம ஏறபடும்,)

२२२. तदानीमेव नष्टत्वात् तत्संस्कारादिकस्य च।
स्थिरस्यैकस्यानुवर्तमानस्यासंमतत्वतः॥

२२३. भवेदहैतुकी सिद्धिः अप्रयत्नवतामपि।
उभयोरप्ययं दोषः समोऽतो दर्शनं न सत्॥

॥इति समुदायाधिकरणम्॥

---

*221-223.* **ஸிததாந்தம்.** மற்றொரு ஹேதுவாலும் பௌத்தமதம் பொருந்தாது. அது என்னவெனில். உலகில மனிதர்கள் வருங்காலத்தில் சில பயனகள் ஏற்பட வேண்டும் என்னும் ஆசையாலே நிகழ்காலததில சில முயற்சிகளைச் செய்வதைக காண்கிறோம். பௌத்த மதத்தினபடி பிரயத்னங்களைச் செய்பவர்கள் அககணததிலேயே அழிநதுவிடுவதால அவாகளுககு வருங்காலத்தில எப்பயனும் இல்லை. அப்பிரயதன்ங்களைச் செய்யாத வேறு எவர்களோ முயற்சியிலலாமலே எலலாப்பயன்களும் ஏற்படுகின்றன என்று சொல்லவேண்டிவரும். பிரயத்னம செய்த மனிதர்கள் அழிந்தபின்பும், அவர்களுடைய ஸம்ஸகாரம் முதலான ஏதோவொன்று நிலையாயிருந்து பலனையளிககிறது என்று ஒப்புக்கொண்டாலாவது இந்ததோஷத்தை ஓரளவுககுத் தவிர்க்கலாம். அத்தகைய நிலையான எபபொருளையுமே பௌத்தர்கள் ஒப்புககொள்ளாததால், முயற்சி செய்யாதவர்களுககு போகம மோக்ஷம முதலிய எலலாப் பேறுகளும் கிடைக்கின்றன என்னும் தோஷம் அவர்களால் தவிாகக வொண்ணாததேயாகும். வைபாஷிகர், ஸௌத்ராநதிகள் ஆகிய இருவர்ககும் பொதுவான தோஷமாகும் இது. ஆகையால அவர்களுடைய மதம் பொருந்ாது.

ஸமுதாயாதிகரணம் முற்றிற்று

उपलब्ध्यधिकरणम् ॥ (२-२-४)

सि-सू-नाऽभाव उपलब्धेः ॥ (२-२-२७)

२२४. चतुर्विधेषु बौद्धेषु प्राङ्निरस्तं द्वयोर्मतम् ।
योगाचारस्यात्र मतं तृतीयस्य निरस्यते ॥

२२५. यद्वीविचित्रत्वमर्थवैचित्र्यकृतमुच्यते ।
तन्नार्थवन्मतेरेव विचित्रत्वाच्च साकृतेः ॥

---

## உபலப்₃த்₄யதி₄கரணம் ॥ 2-2-4 ॥

**ஸி. ஸூ:- நாப₄ாவ உபலப்₃தே₄: ॥ 2-2-27 ॥**

அப₄ாவ.—(அறிவு தவிர்ந்த வெளிப்பொருள்கள்) இல்லை யென்பது, ந—தவறு, உபலப₃தே₄—(அவ்வறிவுக்கு விஷய மாக அப்பொருள்கள்) காணப்படுகையால்.

224. நாலு விதமான பௌத்தர்களில், க்ஷணிகமான ஜ்ஞானத்தோடுகூட க்ஷணிகமாக வெளிப்பொருள்களும் உள்ளன என்று கூறும் வைப₄ாஷிக ஸௌத்ராந்திகர்களின் மதம் சென்ற அதி₄கரணத்தில் தள்ளப்பட்டது. க்ஷணிக மான ஜ்ஞானமேயுள்ளதேயொழிய வெளிப்பொருள்கள் க்ஷணிகமாககூடக் கிடையாது என்று கூறும் யோகா சாரன் என்னும் பௌத்தவகுப்பினனுடைய மதம் இவ்வதி கரணத்தில் தள்ளப்படுகிறது.

225-230. பூர்வபக்ஷம். வெளிப்பொருள்களில் காணப் படும் விசித்திரமான ஆகாரங்களே அறிவில் பிரதிபலிக் கின்றன என்று வைப₄ாஷிகஸௌத்ராந்திகர்கள் கூறியது பொருந்தாது. விசித்திரமான ஆகாரங்களையுடையதான அறிவை மாத்திரம் ஒப்புக்கொண்டுவிட்டால் போதுமானது, வெளிப்பொருள்களை ஒப்புக்கொள்ளத்தேவையில்லை,

२२६. निराकारधियां कुत्राप्यप्रकाशो हि संमतः।
तत: प्रकाशमानायाः धियस्साकारता भवेत् ॥

२२७. ज्ञायमानो य आकारः स ज्ञानस्येति निश्चयः।
बहिर्वदवभासोऽपि तस्य विभ्रममूलकः ॥

२२८. सहोपलम्भनियमादपि ज्ञानार्थयोस्तथा।
ज्ञानादव्यतिरिक्तोऽर्थः, किञ्च बाह्यार्थवादिभिः ॥

२२९. ज्ञानेप्यर्थसरूपं च रूपमास्थेयमन्यथा।
ज्ञानस्य तत्तदर्थं प्रत्यसाधारणता कथम्।

---

அறிவு எவ்விடத்திலும் ஆகாரம் அற்றதாகப் பிரகாசிப்பதில்லை என்பது அனைவரும் இசைந்தது. ஆகையால், பிரகாசியாநிற்கும் அறிவு அனைத்தும் இயல்வாகவே ஆகாரமுடையதாகவே உள்ளது என்று அறுதியிடலாம். அறியப்படும் ஆகாரத்தை அறிவினுடையதாகவே கொண்டுவிட்டால், அவ்வாகாரமுடைய வெளிப்பொருளொன்றைக் கற்பிக்கவேண்டிய அவசியமில்லை. உள்ளிருக்கும் அறிவினுடைய அவ்வாகாரம் வெளியில் இருப்பதுபோல் தோன்றுவது மயக்கத்தினால் ஏற்படுவது. அறிவும், அறியப்படும் பொருளும் எப்போதும் சேர்ந்தே அறியப்படுவதிலிருந்தும் அறியப்படும் பொருள் அறிவைக் காட்டிலும் வேறுபட்டதல்லவென விளங்குகிறது. மேலும், வெளிப்பொருள் உண்டெனக் கூறுகிறவர்கள் அறிவிலும் அவ்வெளிப்பொருளுடையது போன்ற ஆகாரத்தை ஒப்புக்கொள்ளவேண்டும். இல்லாவிடில், கடத்தைப் பற்றின அறிவு, படத்தைப்பற்றின அறிவு என்று ஒவ்வொரு வெளிப்பொருளைப்பற்றியும் தனித்தனியான அறிவுகளை நிரூபிக்க முடியாது அறிவிலுள்ள அவ்வாகாரங்களைக் கொண்டே முற்கூறிய எல்லா வழக்குகளையும் பொருந்தவிடலாமாயிருக்க, அறிவு தவிர்ந்த வெளிப்பொருள்களை ஒப்புக்கொள்வது யுக்திக்குப் பொருந்தாது. ஆகையால் க்ஷணிகமான

२३०. तावन्मात्रेणैव सर्वव्यवहारोपपत्तितः।
विज्ञानेतरबाह्यार्थकल्पनं नैव युक्तिमत्॥

२३१. इति योगाचारमतं न्यायेऽमुष्मिन्निरस्यते।
विज्ञानव्यतिरिक्तार्थाभावो वक्तुं न शक्यते॥

२३२. जानाम्यहं घटमिति निराबाधोपलब्धितः।
ज्ञातृज्ञानार्थेषु तुल्यं स्फुरत्स्वत्र पृथक् त्रिषु॥

२३३. ज्ञानस्यैकस्य सत्यत्वमसत्यत्वं तदन्ययोः।
वदतोऽस्य मतं नूनं हास्यं निर्युक्तिकत्वतः॥

२३४. सहोपलंभनियमात् अभेद इति तद्वचः।
विरुद्धमर्थभेदस्य साहित्यं साधकं यतः॥

---

அறிவொன்றே உள்ளது எனனும் யோகாசாரமதமே பொருத்தமானது.

*231-*237.* **ஸிததாநதம்**-இந்த யோகாசாரமதம தவறு. அறிவுதவிாநத வெளிவிஷயஙகள் இலலாபபொருள்களே என்று கூறுவது ஒட்டாது "நான் கடததை அறிகிறேன" என்று அறிபவன, அறிவு, அறியபபடும பொருள் ஆகிய மூனறும தனித்தனியே ஒருபடியாகத் தடையறபபிரகாசிக கையில், அறிவு மாததிரமே உள்ளது மற்ற இரண்டும இலலை என்று கூறும யோகாசாரனின மதம யுகதிகளுககு ஒட்டாதாகையால் அறிவாளிகளால் பரிஹஸிககததககதே யாகும. "அறிவும். அறியபபடும் பொருளும் எப்போதும சோந்தே அறியப்படுவதிலிருந்தும், அறியப்படும பொருள் அறிவைககாட்டிலும் வேறுபட்டதலலவென விளங்குகிறது" என்று கூறியதும் ஒட்டாது. இரு பொருள்கள் எப போதும் சேர்ந்தே அறியப்படுகினறனவென்று கூறினால், அவையிரண்டும் வெவ்வேறானவையென்றே ஸித்திககுமே யொழிய இரண்டில ஒனறுதான உள்ளது என்று ஸித்திக

२३५. तदर्थव्यवहारानुगुण्यापादकतैव हि।
तद्ज्ञानस्याकार इति घटादिने तथा भवेत्॥
२३६. ज्ञानस्य यस्य येनास्ति सम्बन्धो विषयेण तत्।
ज्ञानं तद्विषयासाधारणमीदृग्व्यवस्थया॥
२३७. घटाद्यसाधारणत्वं तद्ज्ञानस्य हि कीर्त्यते।
सि-सू-वैधर्म्याच्च न स्वप्नादिवत्॥ (२-२-२८)
स्वाप्नज्ञानस्येव बाह्यघटाद्यर्थधियामपि॥

---

காது. இங்கும் அறிவு, அறியப்படும் பொருள் ஆகிய இரண்டும் எப்போதும் சேர்ந்தே அறியப்படுவதிலிருந்து இரண்டும் உள்ள பொருள்கள் என்று ஸித்திக்குமேயொழிய ஒன்றுதான் — அதிலும் அறிவுமாத்திரந்தான் — உள்ளது என்று ஸித்திக்கமாட்டாது. க4டம் முதலானவை அறிவின் ஆகாரங்கள் என்று கூறுவதும் தவறு, கடம் முதலியவைகளைப்பற்றிய வியவஹாரங்களைச் (உலக வழக்குகளைச்) செய்வதற்குத் தகுதியை உண்டாக்குகையென்பதே க4டம் முதலியவற்றைப்பற்றிய அறிவின் ஆகாரமாகும். எந்த அறிவானது எந்த க4டம் முதலான பொருளோடு ஸம்யோகஸம்பந்தத்தைப் பெறுகின்றதோ, அந்த அறிவு, கடம் முதலான அப்பொருளைப்பற்றியதேயாகையாலே க4டஜ்ஞாநம் என்னப்படுகிறது. ஆக, இப்படியாக க4டபடாதி3களான பொருள்களை அறிவிப்பவையாகவே அறிவுகள் காணப்படுகையால், அறிவு தவிர்ந்த வெளிப்பொருள்கள் இல்லையென்னும் யோகா3சாரமதம் தவறானதேயாகும்.

**ஸி-ஸூ:-வைத4ர்ம்யாச்ச ந ஸ்வப்நாதி3வத் ||2-2-28||**

**வைத4ர்ம்யாத் ச** — (ஸ்வப்நஜ்ஞாநம் முதலானவற்றைக் காட்டிலும் வெளிப்பொருள்களைப்பற்றிய அறிவு) வேறு வகைப்பட்டிருக்கையாலும். **ஸ்வப்நாதி3வத்** — ஸ்வப்ந ஜ்ஞாநம் முதலானவற்றைப்போலே. **ந** — பொய்யான பொருள்களைப்பற்றியதல்ல.

२३८. अर्थशून्यत्वसिद्ध्या च बाह्यार्था नेति चेन्न तत्।
जाग्रद्दशाधियां स्वप्नज्ञानवैधर्म्यतो भृशम्॥
२३९. अर्थशून्यत्ववादो न युज्यते, स्वप्नगा धियः।
निद्रादुष्टेन्द्रियाज्जन्या बाधिताश्च भवन्ति हि॥
२४०. जाग्रद्दशाधियश्चैतद्विपरीता न तत्समाः।
वस्तुतस्स्वाप्निके ज्ञानेप्यर्थसत्यत्वमिष्यते॥

---

237*-*238. பூாவபக்ஷம. கடம் முதலான விஷயங களும். அவற்றை அறிவிபபவையாகவே அறிவுகளும காணப படுவதால் மாததிரம வெளிபபொருள்கள் உண்டென்று கூறமுடியாது. அபபடி நிாபபநதிததால, காணபபடும சுகதிரஜதம (கிளிஞ்சலில வெள்ளி), ரஜ்ஜுஸர்பபம (பழுதையில பாமபு) முதலானவறறையும உள்ளபொருள களாக ஒபபுககொள்ளவேணடிவரும ஆகையால, "விழித திருககுமபோது காணப்படும அறிவுகள உள்ளபொருள் களைப பறறிவையலல; அறிவுகளாயிருபபதால. ஸவபனத தில காணபபடும அறிவுகளைபபோல எனனும அநுமானத தாலே வெளிபபொருளகளை இலலாபபொருள்களாகக கொள்ளும யோகாசாரமதமே பொருததமுடையது.

*238-*242. ஸிததாந்தம. இபபூர்வபக்ஷம தவறு. ஸவபனததில காணபபடும அறிவுகளைக் காட்டிலும், விழிப பில காணபபடும அறிவுகள் நெடுவாசிபட்டிருககையால, அவ்வறிவுகளைககொண்டு இவ்வறிவுகளைப பொயயறிவு களாககமுடியாது; ஸவப்னத்தில காணப்படும அறிவுகள தூககததாலே மழுங்கிய இநதிரியங்களால் உணடாகினற வையாகவும. விழிததவுடன தள்ளபபட்டவையாகவு மன்றோ உள்ளன. இதற்கு நேர்மாறாக விழிபபுணாச்சி யாலே கூாமைபெற்ற இந்திரியஙகளால உண்டாகினறவை யாய், தளளபபடாதவையாயுள்ள விழிபபுநிலையறிவுகள் அவை போலே எபபடித தள்ளப்பட்டவையாக முடியும்? உணமை யில் கனவுகளில ஏறபடும் அறிவுகளில தோனறும பொருள் களும் உண்மையானவை எனறே கொள்ளப்படுகினறன.

२४१. ज्ञानानामर्थशून्यत्वे साध्योऽप्यर्थो न सिद्ध्यति।
निरालम्बानुमानस्याप्यर्थशून्यत्वतस्तव॥
२४२. तस्यार्थवत्त्वे ज्ञानत्वमनैकान्तं भवेत् खलु।
सि-सू-न भावोऽनुपलब्धेः॥ (२-२-२९)
भावोऽर्थशून्यज्ञानस्य न संभवति च क्वचित्॥

---

'ஸ ரதா2ந் ரத2யோகா3ந் பத2: ஸ்ருஜதே ஸ ஹி கர்த்தா' [ப்3ருஹ 6-3-10] முதலான ஶ்ருதிகளில் பரமாத்மா ஸ்வப்னம் காண்பவனுக்கு மாத்திரம் அனுபவிக்கப்படுகின்ற உண்மையான பொருள்களையே ஸ்ருஷ்டிக்கிறான் என்று சொல்லப்பட்டமையால், ஸ்வப்னஜ்ஞானத்தை திருஷ்டாந்தமாக்க முடியாது. மேலும், "விழித்திருக்கும்போது காணப்படும் அறிவுகள் உள்ள பொருள்களைப் பற்றியவையல்ல: அறிவுகளாயிருப்பதால்" என்னும் அனுமானத்தினால் ஏற்படும் அறிவு உள்ள பொருளைப்பற்றியதா அல்லவா என்னும் கேள்வி எழுகிறது. உள்ள பொருளைப் பற்றியதெனில், இவ்வனுமானத்தால் ஏற்படும் அறிவு உள்ள பொருளைப் பற்றியதாகையாலே, ஸாத்4யம் (உள்ள பொருளைப் பற்றியதாயிராமை) இல்லாத இவ்வனுமானத்தில் அறிவாயிருக்கையாகிற ஹேது இருக்கிறபடியால் வ்யபி4சாரம் என்னும் தோ3ஷம் ஏற்படுகிறது. அவ்வறிவு உள்ள பொருளைப் பற்றியதல்லவெனில், அவ்வனுமானமே உண்மைப்பொருளை உணர்த்தமாட்டாதென்று தேறுகிறபடியால், 'அறிவுகள் உள்ள பொருள்களைப் பற்றியவையல்ல' என்னும் ஸாத்4யம் ஸித்திக்காது.

**ஸி-ஸூ:-ந பா4வோऽநுபலப்3தே4: ॥ 2-2-29 ॥**

**அநுபலப்3தே4:**—(அறிபவனும், அறியப்படும் பொருளும் இல்லாத அறிவு எதுவுமே உலகில்) காணப்படாமையால் **பா4வ:**—(உள்ள பொருளைப் பற்றியிராத அறிவின்) ஸத்3பா4வம் (இருப்பு), **ந**—ஸித்திக்காது.

२४३. अकर्तृकाकर्मकस्य ज्ञानस्यानुपलब्धितः ।
अतो योगाचारमतं सर्वमप्यसमञ्जसम् ॥
॥ इत्युपलब्ध्यधिकरणम् ॥

सर्वथानुपपत्त्यधिकरणम् ॥ २-२-५ ॥

सि-सू-सर्वथानुपपत्तेश्च ॥ (२-२-३०)

२४४. बौद्धैकदेशिनां पक्षाः त्रिविधानां निराकृताः ।
अथ माध्यमिकस्सर्वशून्यवादी निरस्यते ॥

---

*242*—243.* உலகில எல்லாவிடங்களிலும ஏறபடும் அறிவுகளை ஆராய்ந்தால, அறிபவனும், அறியபபடும பொருளும இலலாத அறிவு எஙகுமே ஏறபடுவதிலலை எனபதைக் காண்கிறோம. ஆகையால, எவவிடததிலும உள்ள பொருளைப் பறறியிராத அறிவு எனறு ஒனறு ஸிததிககவே மாட்டாது. ஆகையால, யோகாசாரமதம முழுவதும பொருநதாததேயாகும.

உபலப₃த்₄யதி₄கரணம முற்றிறறு

## ஸர்வத₂ாநுபபத்த்யதி₄கரணம் ॥ 2-2-5 ॥

**ஸி-ஸூ:-ஸர்வத₂ாநுபபத்தேஶ்ச ॥ 2-2-30 ॥**

ஸாவத₂ா-எவ்வகையிலும், அநுபபததே ச-பொருந்தாதாகையாலும (ஸர்வஶூந்யவாதம ஒட்டாது.)

244. இதுவரையில பௌ₃ளத்த₄ர்களில வைப₄ாஷிகன், ஸௌதராநதிகன், யோகாசாரன எனனும மூனறு வகுபபினர் தள்ளப்பட்டனர். இவர்கள் அனைவரும் க்ஷணிகமாகச சில பொருளகளை ஒபபுககொணடவர்கள். இனி, க்ஷணிகமாகக்கூட எபபொருளும கிடையாது எனறு கூறும ஸாவஶூநயவாதியான மாத₄யமிகன (நாலாவது வகுபபினன) இவ்வதி₄கரணத்தில தள்ளப்படுகிறுன.

२४५. उत्पत्तिर्दुर्निरूपैव भावतोऽभावतस्तथा ।
घटादिश्चोत्पद्यमानः मृदादेरुपमर्दितात् ॥
२४६. उत्पद्यते चोपमर्दः नाशस्तस्याऽऽकृतेस्म च ।
अभाव एव तस्मान्न भावादुत्पत्तिरिष्यते ॥

---

245-*248. பூர்வபக்ஷம். "அறிவோடு வெளிப்பொருள்களோடு வாசியற எல்லாம் இல்லாப் பொருள்களே. சூந்யமே உண்மை. காண்பதாகத் தோற்றுவதெல்லாம் பொய்; இத் தோற்றம் அழிந்து இல்லாமற்போவதே மோக்ஷம்" என்பதே புத்தரின் மனப்பூர்வமான கருத்தாகும். இவ்வரிய பொருளை ஏற்கத்தக்க பக்குவமில்லாதவர்களுக்காகவே, வெளிப்பொருள்களும், அறிவும் க்ஷணிகமாக உள்ளன என்று வைபாஷிகாதிகளுக்குப் படிப்படியாக ஸூந்யவாதத்தை அவரவர் பக்குவத்திற்குத் தக்கவாறு அவர் உபதேசித்தார். ஆகையால் சூந்யமே தத்துவம் என்பதே பொருந்தும். எப்படியெனில் பொருள்களை உண்டென்று ஸாதிக்க விரும்புகிறவர்கள்தான் அதற்கு ப்ரமாணத்தைத் தேடவேண்டும். பொருள்கள் இல்லையென்பது ஒரு ப்ரமாணாபேக்ஷையின்றிக்கே தன்னடையே தேறிநிற்கும். இனி, பொருள்களை உண்டென்று ஸாதிக்கப்பார்ப்பவர்கள் முதன்முதலில் அவை எப்படி உண்டாகின்றன என நிரூபிக்கவேண்டும்; அப்படி நிரூபிக்கப்பார்த்தால், உள்ள பொருளிலிருந்தோ இல்லாப் பொருளிலிருந்தோ எப்பொருளும் உண்டாவதாக அவர்களால் நிரூபிக்கமுடியாது. முதலில், உள்ள பொருளிலிருந்து அவை உண்டாகின்றனவென்று நிரூபிக்கப்பார்த்தால் மண்கட்டி முதலான காரணப் பொருள்கள் அழிந்தபின்பே குடம் முதலான கார்யப் பொருள்கள் உண்டாவதைக் காண்கிறோம். மண்கட்டியின் ஆகாரம் இல்லாமற்போவதே அதன் அழிவாகும். இது மண்கட்டியின் அபாவமேயாகும். ஆகையால் அபாவத்திலிருந்து (இல்லாப்பொருளிலிருந்து) குடம் உண்டாகிறதென்று தேறுமேயொழிய உள்ள

२४७. नान्यः पक्षोप्यभावाच्च भावोत्पत्तेरसंभवात् ।
इत्थं च दुर्निरूपत्वादुत्पत्तेस्तदनन्तराः ॥

२४८. विकाराश्च न सन्त्येवाऽतस्तत्त्वं शून्यमुच्यते ।
मतं माध्यमिकस्येदं सर्वथा नोपपद्यते ॥

२४९. सर्वं सदिति वा सर्वमसदित्येव वान्यथा ।
शून्यवादी प्रतिज्ञाय यतेत स्वेष्टसाधने ॥

---

*பொருளான பூர்வத்திலிருந்து உண்டாகிறதென்பதும் தேறுது. இனி, அபூர்வமாகிற இல்லாப்பொருளிலிருந்து, பூர்வமாகிற உள்ள பொருள் உண்டாகக் கூடுமா என ஆராய்ந்தால், உள்ள பொருள் மற்றோர் உள்ள பொருளிலிருந்து உண்டாகலாமேயொழிய இல்லாப் பொருளிலிருந்து உண்டாகமாட்டாது; அப்படியுண்டானால் அதுவும் இல்லாப் பொருளேயாகவேண்டிவரும். ஆகவிப்படி உள்ள பொருளிலிருந்தோ, இல்லாப் பொருளிலிருந்தோ எப்பொருளும் உண்டாவதாக நிரூபிக்கமுடியாததாகையால், பொருள்களின் உற்பத்தியை எவ்வகையாலும் நிரூபிக்கமுடியாதென்று தேறுகிறது. பொருள்களின் உற்பத்தியையே நிரூபிக்க முடியாதபோது அதற்குப்பின் அவற்றுக்கு ஏற்படும் வளருவது, தேய்வது முதலான மற்ற விகாரங்களை நிரூபிக்க முடியாதென்று தானாகவே ஸித்திக்கும். ஆகையால் சூந்யமே தத்துவமாகும்.*

*248*-255.* **ஸித்தாந்தம்.** *ஸர்வசூந்யவாதியான மாத்யமிகனுடைய இம்மதம் எவ்வகையிலும் பொருந்தாது. 'எல்லாப் பொருள்களும் உள்ளவை' என்றோ 'எல்லாப் பொருள்களும் இல்லாதவை' என்றோ, வேறுவிதமாகவோ ப்ரதிஜ்ஞைசெய்து, மாத்யமிகன் தன் இஷ்டத்தை ஸாதித்துக் கொள்ளவேண்டும். எப்படி ப்ரதிஜ்ஞை செய்தாலும் பொருந்தாதாகையால் எல்லாம் சூந்யமென்பதே தேறுது.*

२५०. सर्वथानुपपत्तेश्च तदिदं तु न संभवेत्।
वस्तुनो विद्यमानस्य सदसच्छब्दताद्वियोः॥
२५१. अवस्थागोचरत्वं हि प्रोक्तं तस्मान्न तुच्छता।
कुतश्चिदपि सिद्ध्येत्तदभिप्रेता हि सर्वथा॥
२५२. इष्यते यदि नास्तित्वं अखिलं शून्यमित्यतः।
तर्हि रूपान्तरेणैवास्तित्वं प्रोक्तं भवेत्, यतः॥
२५३. रूपान्तरापत्तिरेव नास्तिशब्दार्थ उच्यते।
ततो मृत्पिण्डोपमर्दः घटत्वोत्पत्तिरूपकः॥

---

உலகில் 'குடம் இல்லை' என்றால், 'குடத்தின் அமைப்புடன் இல்லை, ஓட்டின் அமைப்புடன் இருக்கிறது' என்றே தேறுகிறது, அப்படியே அறியவும் படுகிறது. 'குடம் இருக்கிறது' என்றால் 'குடத்தின் அமைப்புடன் இருக்கிறது' என்றே தேறி அப்படியே அறியப்படுவதுபோலே, 'குடம் இல்லை' என்றாலும் வேறோரமைப்புடன் இருக்கிறதென்றே தேறி, அப்படியே அறியப்படுகிறதென்பதை எங்கும் காண்கிறோம். ஆகையால், 'இருக்கிறது' என்னுமிடத்தோடு, 'இல்லை' என்னுமிடத்தோடு வாசியற ஒவ்வோராகாரத்துடன் பொருள் இருப்பதாகவே கூறியதாகத் தேறுகிறபடியால், மாத்4யமிகன் கருத்தும் சூந்யநிலை எப்படி ப்ரதிஜ்ஞை செய்தாலும் எவ்வகையிலும் தேறாது. இனி, பூர்வபக்ஷத்திற்கூறிய யுக்திகள் கண்டிக்கப்படுகின்றன. 'எல்லாம் சூந்யம்' என்னும் ப்ரதிஜ்ஞையால், 'எல்லாப் பொருள்களும் இல்லை' என்று கருதப்படுகிறதாகில், முற்கூறியபடி 'எல்லாப்பொருள்களும் வேறு நிலைகளில் உள்ளன' என்றதாகவே தேறும். ஒரு நிலையில் இருக்கும் பொருள் மற்றொரு நிலையை அடைவதே உலகில் 'இல்லை' என்னும் சொல்லுக்குப் பொருளாகக் காணப்படுகையால், மண்கட்டியின் நாசமே க4டத்தின் உத்பத்தியெனக்கொள்ள

२५४. मृद्द्रव्यं पिण्डतावस्थायुक्तमुत्पादकं, तथा।
तदेव घटतावस्थायुक्तमुत्पाद्यमिष्यते॥

२५५. तस्मादभावाद्भावस्य नोत्पत्तिः क्वचिदिष्यते।
तस्मान्माध्यमिकस्येदं मतं सर्वमसङ्गतम्॥

॥ इति सर्वथानुपपत्त्यधिकरणम्॥

---

வேண்டும். கட்டிநிலையிலிருக்கும் மண் எனும் திரவியமே காரணமாகவும். க₄டநிலையிலிருக்கும் அந்த மண்ணே அதற்குக் கார்யமாகவும் கொள்ளப்படுகிறது ஆக இவ்வண்ணமாக எவ்விடத்திலும் சூன்யபொருளிலிருந்து ஒரு பொருள் உண்டாவதாகக் கொள்வதில்லையாகையால், மாத₄யமிகனுடைய ஸர்வஶூந்ய வாதம் முழுவதும் பொருந்தாததாகும். இவ்விஷயத்தையே நம்மாழ்வார்

"உளன் எனில் உளன் அவன உருவம் இவ்வுருவுகள்
உளனலன் எனில அவன் அருவம இவவருவுகள
உளன் என இலன என இவை குணமுடைமையில்
உளன இருதகைமையொடு ஒழிவிலன பரந்தே"

[திருவாய்1-1-9]

என்று திருவாய்மொழியிலே அருளிச்செய்தார். இப்பாசுரத்தின இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானத்தில்,

"[உளனெனில்] — உளனென்று ப்ரதிஜ்ஞையாகில், [உளன்] — அஸ்தித்வ விஶிஷ்டனைக்கொண்டு உளனும், ஈஶ்வரன் உளனும்போது ஐஶ்வர்யத்தையொழிய உளனாகக் கூடாமையாலே விபூ₄தியான ஜக₃த்தும் உண்டாம். [அவனுருவம் இவ்வுருவுகள்]–உண்டாமிடத்தில், ப்ரமாணம் காட்டுகிறபடியே ஶரீரமாய்க்கொண்டு உளவாம். 'இல்லாமையை ஸாதி₄க்கிற நான் அஸ்திஶப்₃த₃த்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணுவனோ? என்னில - 'உளன்' என்கிற ஶப்தம் இல்லாமையைக் காட்டமாட்டாதோபாதி, இல்லை, என்கிற ஶப்₃த₃மும் நீ நினைக்கிற அத்யந்தாப₄ாவத்தைக் காட்டமாட்டாதென்கை. [உளனலனெனில்]-நாஸ்திஶப்₃த₃த்தாலே

அவனுடைய இல்லாமையை ப்ரதிஜ்ஞை பண்ணில், லோகத்தில் நாஸ்தி ஶப்₃த₃ார்த்த₂மே உனக்கும் அர்த்த₂மாகவேணும், 'க₄டோ நாஸ்தி'யென்றால், இங்கில்லையென்னுதல், இப்போதில்லை யென்னுதல், ம்ருத்பிண்ட₃மாய், உத்பத்தயபூ₄ாவத்தாலே இல்லையென்னுதல், கபாலாவஸ்த்த₂மாய் இல்லையெனனுதல், இவற்றிலே ஒன்று நாஸ்திஶப்₃த₃ார்த்த₂மாகக் கண்டோம், ஆகையாலே, ஒருபடியாலே இல்லையானது ப்ரகாராந்தரத்தாலே உண்டாயிருக்கையால், ஈஶ்வரனும் நாஸ்தித்வ விஶிஷ்டனாயக்கொண்டு உளனும் [அவனருவம் இவ்வருவுகள்]–அவனுடைய விபூ₄தியும் ஒரு ப்ரகாரத்தாலே இல்லையானவை ப்ரகாராந்தரத்தாலே உண்டாகையாலே அபூ₄ாவவிஶிஷ்டமாய்க் கொண்டு உளவாம். [உளனென இலனென இவைகுணமுடைமையில்]- அஸ்தித்வ நாஸ்தித்வங்கள் உள்ள வஸ்துவுக்கு இரண்டும் கு₃ணமாய் முடிகையாலே [உளனிருதகைமையொடு] ஈஶ்வரன் உளனென்றுதல், இலனென்றுதல், இரண்டுபடியாலும் உளன் [ஒழிவிலன்பரந்தே]-இவ்வழியாலே விபூ₄தியையும் வ்யாபித்துக்கொண்டே யொழிவிலன்."

*என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. ''ஸாவதா₂ அநுபபத்தேஶ்ச' என்னும் ஸூத்ரத்திற்கு வேறொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம். அதாவது.— 'எல்லாம் ஶூந்யம் என்று ஸாதிக்கப்பார்க்கும் மாத்₄யமிகன் ஏதேனுமொரு ப்ரமாணத்தின் மூலமே அதைக்கண்டு ஸாதிக்கவேண்டும். அப்படி ஸாதிக்கும்போது அந்த ப்ரமாணம் உண்மையானது என்று ஒப்புக்கொண்டேதீர வேண்டும். அப்படி ஒப்புக்கொண்டால ப்ரமாணம் ஒன்று உண்மையாகிவிடுகிறபடியால ''எல்லாம் ஶூந்யம்' என்பது போய்விடும். இதைத் தவிர்ப்பதற்காக அந்த ப்ரமாணம் பொய்யானது என்னில், 'எல்லாம் ஶூந்யம்' என்பதை ஸாதிக்கும் ப்ரமாணம் பொய்யானதால எல்லாம் உண்மை என்றே ஸித்திக்கும். இவ்வண்ணமாகப் பார்த்தாலும் ஸாவஶூந்யவாதம் எவ்வகையிலும் பொருந்தாது என்று தேறுகிறது.*

ஸாவதா₂நுபபத்த்யதி₄கரணம் முற்றிற்று

॥ एकस्मिन्नसंभवाधिकरणम् ॥ (२-२-६)

सि-सू-नैकस्मिन्नसंभवात् ॥ (२-२-३१)

२५६. निरस्यैवं सौगतोक्तिमार्हतस्य मतं त्विह।
अणुकारणतावादसाम्योपस्थितमस्यते ॥

२५७. जगत् जीवादिभेदेन षड्द्रव्यात्मकमीश्वरः।
न कश्चिदस्त्यत्र जीवः देहतुल्यप्रमाणवान् ॥

## ஏகஸ்மிந்நஸம்ப₄வாதி₄கரணம் ॥ 2-2-6 ॥

### ஸி-ஸூ:-நைகஸ்மிந்நஸம்ப₄வாத் ॥ 2-2-31 ॥

ஏகஸமிந்—ஒரு பொருளில. அஸம்ப₄வாத—(ஒன்றுக்கொன்று முரண்பட்ட அஸ்தித்வம, நாஸ்திதவம முதலான தன்மைகள் ஒரே காலததில்) பொருநதமாட்டாவாகையால. ந—(ஒரே பொருளில ஒரே காலததில் விருத₃த₄த₄ர்மங்களை ஒபபுககொளளும்) ஜைநமதம பொருந்தாது.

256. முன மூன்று அதிகரணங்களில நாலு வகைப பட்ட பௌ₃ளத₃த₄வகுபபினரையும நிரஸித்துவிட்டு. அணு காரணவாதம் செய்யுமவர்கள் என்னும் அமஶததில் அவா களை ஒத்திருக்கையாலே. இவ்வதி₄கரணத்தில ஜைனமதத தைச சோந்தவாகள் நிரஸிககப்படுகிறாாகள.

257—*259—பூர்வபக்ஷம—ஜைனமதம பின்வருமாறு:- உலகை நியமிககும ஈஶவரன என்று ஒருவன கிடையாது உலகு மாததிரமே உளளது. அவவுலகம் ஆறு திரவியங களாயிருப்பது. அவையாவன.— 1. ஜீவன. 2. த₄ர்மம. 3. அத₄ர்மம், 4. புத₃க₃லம், 5. காலம. 6. ஆகாஶம் என்பவையே. இவற்றில ஜீவததுவம ப₃த்₃த₄ன. யோக₃ஸித₃த₄ன், முகதன என மூவகைப்படும். இவ் வுலகிலிருககும் வரையில ஜீவன தானிருககும தேஹத்தை யொத்த பரிமாணத்தை (அளவை) உடையவனயிருககிறன.

இரண்டாவது தத்துவமான தர்மமாவது.— ஸஞ்சாரத்தை
உடைய (ஜங்கம) ஜீவர்களுக்கு அந்த ஸஞ்சாரத்திற்குக்
காரணமாயிருப்பதாய், உலகெங்கும் பரவியிருப்பதான
ஒரு திரவியமாகும். மூன்றாவது தத்துவமான அதர்மமா
வது —(ஸ்தாவர) ஜீவர்களுடைய ஸஞ்சாரமின்மைக்குக்
காரணமாயிருப்பதாய் உலகெங்கும் பரவியிருப்பதான
மற்றொரு திரவ்யமாகும். நான்காவது தத்துவமான
புத்கலமாவது.— நிறம், மணம், சுவை ஸ்பரிசம் ஆகிய
வற்றை உடையதொரு திரவியம், அது பரமாணுவென்றும்,
அதன் கூட்டரவான காற்று, தீ, நீர், பூமி, சரீரம், லோகங்
கள் முதலியவையென்றும் இருவகைப்படும். ஐந்தாவது
தத்துவமான காலமாவது.— 'நடந்தது, நடக்கிறது நடக்
கப்போகிறது' என்னும் உலகவழக்குகளுக்குக் காரணமான
தாய், அணுவானதொரு திரவியம். ஆறாவது தத்துவமான
ஆகாசம் ஒன்றாய், அளவற்ற பிரதேசரூபமாயிருப்பது.
இவற்றில் அணுவான காலமும் புத்கலத்தில் அணுப்பகுதி
யும் தவிர்த்த மற்றவைகளைந்தும் அஸ்திகாயங்கள் என்றும்
கூறப்படுகின்றன. இத்தத்துவங்கள் எல்லாமே ஸப்த
பங்கிந்யாயத்தினால் உள்ளதென்றோ இல்லாததென்றோ
சொல்லமுடியாதபடி ஒருபடிப்பட்டிராதவையாயுள்ளன என
நிரூபிக்கப்படுகிறது. ஒருபடிப்பட்டிருக்கையை பங்கப்படுத்
தும் ஸப்தபங்கிந்யாயமாவது -உலகிலுள்ள பொருள்கள் ஒருபடிப்
பட்டிராமல், பலபடிப்பட்டேயிருப்பனவென்று காட்டும்
ஏழு உலகவழக்குகள். அவையாவன,—(1) (பொருள்) உள்ள
தாகவுமிருக்கலாம்; (2) இல்லாததாகவுமிருக்கலாம், (3) உள்ள
தாகவும், இல்லாததாகவுமிருக்கலாம் (4) உள்ளதென்றோ,
இல்லாததென்றோ சொல்லமுடியாததாகவுமிருக்கலாம், (5)
உள்ளதாயிருக்கலாம், உள்ளதென்றோ இல்லாததென்றோ
சொல்லமுடியாததாகவுமிருக்கலாம் (6) இல்லாததாயிருக்க
லாம், உள்ளதென்றோ இல்லாததென்றோ சொல்லமுடியாத
தாகவுமிருக்கலாம் (7) உள்ளதாகவும், இல்லாததாகவுமிருக்

२५८. सदेवेत्यादिनियमशून्यं वस्त्वखिलं च तत्।
सर्वं च सदसद्रूपं नित्यानित्यात्मकं तथा॥

२५९. भिन्नाभिन्नात्मकमपीत्येवं जैनमतं न सत्।
सत्त्वासत्त्वादिधर्माणां तेजस्तिमिरवन्मिथः॥

२६०. विरुद्धानामेकदैवासंभवादेकवस्तुनि।
नैतन्मतं सङ्गतं स्यात्, अश्वत्वमहिषत्वयोः॥

२६१. कथं युगपदेकस्मिन् समावेशस्य संभवः।
ईशानधिष्ठिताणोश्च कारणत्वे य ईरिताः॥

---

கலாம்; உள்ளதென்றோ, இலலாததெனறோ சொலலமுடியாததாகவுமிருக்கலாம். இந்த ஸபதப$_4$ங்கி$_3$யினுலே எலலா வஸ்துககளும உள்ளதாகவும, இலலாததாகவுமிருப்பவையெனறு தேறுகிறது. இதுபோலவே (பொருள்) நித்யமாகவுமிருககலாம அநிதயமாகவுமிருககலாம் எனறு தொடங்கும ஸபதப$_4$ங்கி$_3$யாலே எலலாபபொருள்களும் நிதயமாகவும அநிதயமாகவுமுள்ளவை எனறு தேறுகிறது. இதுபோலவே (பொருள்) பி$_4$ந்நமாகவுமிருக்கலாம அபி$_4$ந்நமாகவுமிருககலாம் எனறு தொடங்கும ஸப்தப$_4$ங்கி$_3$யாலே எல்லாபபொருள்களும் பி$_4$ந்நமாகவும் அபி$_4$ந்நமாகவும் உள்ளவை எனறு தேறுகிறது. அக, இந்த ஸபதப$_4$ங்கீ$_3$ந்யாயததாலே எல்லாப் பொருள்களும் உள்ளதாகவும், இலலாததாகவும, நித்யமாகவும், அநித்யமாகவும், பி$_4$ந்நமாகவும, அபி$_4$நநமாகவுமிருக்கையாலே ஒருபடிப்பட்டிராதவையாய் உள்ளன

*259-*262. ஸிததாந்தம. இநத ஜைனமதம தவறு. ஒளியும, இருளும்போலே, உள்ளதாயிருககை, இலலாததாயிருக்கை முதலான ஒனறுககொன்று முரணபடட தனமைகள் ஒரே காலத்தில ஒரே பொருளில இருக்கமுடியாதன்றோ. ஒரே பொருளில குதிரையாயிருககும தனமையும,

२६२. दोषास्ते तदवस्थाश्चेत्ययुक्तं जैनजल्पनम्।
सि-सू—एवं चात्माऽकार्त्स्न्यम्॥ (२-२-३२)
जीवस्यैवं वपुस्तुल्यमानाभ्युपगमे मति॥

२६३. हस्तिदेहस्थितस्यास्य मशकादिप्रवेशने।
अल्पदेशव्यापितया भवेदपरिपूर्णता॥

---

எருமையாயிருக்கும் தன்மையும் எப்படிக் கூடியிருக்க முடியும்? ஸர்வேச்வரனால் அதி₄ஷ்டிக்கப்படாத பரமாணுக்களைக் காரணமாகக் கொள்ளும் பக்ஷத்தில் முன் அதி₄கரணங்களில் சொல்லப்பட்ட தோஷங்கள் ஈச்வரனால் அதி₄ஷ்டிக்கப்படாத பரமாணுக்களை ஒப்புக்கொள்ளும் ஜைனமதத்திலும் ஏற்படும். ஆகையால் ஜைனமதம் பொருந்தாததேயாகும்.

**ஸி-ஸூ:-ஏவம் சாத்மாகார்த்ஸ்ந்யம் ॥ 2-2-32 ॥**

**ஏவம்**—இவ்வண்ணமாக (தேஹத்தோடொத்த பரிமாணமுடையவனாக ஜீவனை) ஒப்புக்கொண்டால், **ஆத்மாகார்த்ஸ்ந்யம்**—ஆத்மாவுக்கு நிறைவின்மையாகிற தோஷம் ஏற்படும்.

262*-*264—தேஹத்தை நியமிப்பவனாகையால் ஜீவனுக்கு தேஹத்தையொத்த பரிமாணம் (அளவு) ஜைனர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இப்படி ஒப்புக்கொண்டால் பெரிதான யானையின் தேஹத்திலிருக்கும் ஜீவன், மறுபிறப்பில் சிறிதான கொசுவின் தேஹத்தில் நுழையும்போது ஆத்மஸ்வரூபத்திற்குக் கொசுவின் தேஹத்தில் முழுமையின்மை ஏற்படும். இதேபோல சிறிதான கொசுவின் தேஹத்திலுள்ள ஆத்மா, மறுபிறப்பில் பெரிதான யானையின் தேஹத்தில் நுழையும்போது முழு தேஹத்தையும் வியாபித்திருக்கமாட்டாமையாகிற தோஷம் ஏற்படும். ஜைனபக்ஷப்படி இவ்வ தோஷங்கள் நேரும்.

२६४. बृहद्देहप्रवेशेऽपि कृत्स्नव्याप्तिर्न तत्र च।

सि-सू—न च पर्यायादप्यविरोधो विकारादिभ्यः॥ (२-२-३३)

न च सङ्कोचादिरूपावस्थाभ्युपनमेन च॥

२६५. परिहर्तुं विरोधोऽस्य शक्यते घटतुल्यता।

विकारित्वानित्यतादिदोषास्पदतया भवेत्॥

सि-सू—अन्त्यावस्थितेश्चोभयनित्यत्वादविशेषः॥ (२-२-३४)

---

**ஸி-ஸூ:-ந ச பர்யாயாத₃ப்யவிரோதே₄ா விகாராதி₃ப்₄ய: ॥ 2-2-33 ॥**

பாயாயாத அபி —( ஸங்கோசவிகாஸங்களாகிற ) வெவ்வேறு நிலைகளை அடைகையைக கொண்டும **ந ச அவிரோத₄** - விரோத₄மினமையை ஸாதி₄ககமுடியாது. **விகாராதி₃ப₄ய** — விகாரம, அதனால வரும அநித்யதவம முதலான தோஷங்கள் வருமாகையால.

264*-265—பெரிய தேஹததிலிருநது சிறிய தேஹததிறகுச் செலலும்போது ஜீவஸவரூபத்திறகுச் சுருககமும். சிறிய தேஹததிலிருந்து பெரிய தேஹததிற்குச் செலலும போது அதறகு விரிவுமாகிற வேறு நிலைகள் ஏற்படுகினறன என்று ஒப்புக்கொண்டு முன ஸூததரததிறசொனன தோஷத்தைத் தவிர்பபோம எனறு பாரததால. அதுவும ஒட்டாது. ஏனெனில அப்படி ஸங்கோசவிகாஸங்களை ஜீவஸவரூபததிறகு ஒபபுககொண்டால, விகாரமுடையதாயிருககையும். அதனாலுண்டாகும அநித்யதவம் முதலானவையும ஏறபடுகையாலே. ஜீவஸவரூபம் க₄டம் முதலான அநித்யப்பொருள்களை ஒததததாகிவிடும. ஆகையால முன ஸூதரத்திற்சொனன தே₃ாஷம் தவிாககவொண்ணாததேயாகும.

**ஸி-ஸூ:-அந்த்யாவஸ்தி₂தேஶ்சோப₄யநித்யத்வாத₃விஶேஷ: ॥ 2-2-34 ॥**

२६६. आत्मनो मोक्षकाले यत्परिमाणं तदेव च ।
स्वाभाविकं ततश्चात्मस्वरूपवदमुष्य च ॥
२६७. मोक्षकालिकमानस्य नित्यत्वात्पूर्वमप्यदः ।
मानमेवेति वक्तव्यतया तस्यात्मवस्तुनः ॥
२६८. पूर्वं वपुस्तुल्यमानवादोऽतीवासमञ्जसः ।
तस्मान्मिथो विरुद्धत्वात् मतमेतदसङ्गतम् ॥

इत्येकस्मिन्नसंभवाधिकरणम् ॥

---

**அந்த்யாவஸ்திதே.**—கடைசியில (மோக்ஷநிலையில) (ஆத்மாவுக்கு) ஏற்படும் பரிமாணம் இயல்வானதாகையால், **உபயநித்யத்வாத்**—(அந்நிலையில) ஆத்மாவும், அதன் பரிமாணமும் நித்யமாகையால, **அவிசேஷ**—(முன்னும்) அப்பரிமாணத்தைக் காட்டிலும் வேறுபட்ட தேஹஸமான பரிமாணம் கூடாது

266-268 — ஆத்மாவுக்கு மோக்ஷநிலையில ஏற்படும் பரிமாணமே இயல்வானது. அது முக்திப்பின் வேறு தேஹத்தை எடுப்பதில்லையாகையால. அந்நிலையில் ஆத்மாவும், அதன பரிமாணமும நித்யமானவை. ஆகையால ஸம்ஸாரதசையிலும் ஆத்மாவுக்கு இயல்வான அப்பரிமாணத்தை ஒப்புக் கொள்ளவேண்டுமேயொழிய தேஹத்தையொத்த பரி மாணத்தை ஒப்புக்கொள்வது பொருந்தாது. இவ்வண்ணமாக, முன்னுக்குப் பின முரணாகப்பேசும் இம்மதம் பொருந்தாததேயாகும்.

வேதவிருத்தமான மற்றும் பல ஜைனமதக் கொள்கைகள் பூர்வபக்ஷத்தில் கூறப்பட்டன. பூர்வமீமாம் ஸையில வேதவிருத்தமான ஆகமங்களின் அப்ராமாண்யம நிரூபிக்கப்பட்டிருக்கையாலேயே அக்கொள்கைகள் நிரஸிக்கப்பட்டுவிட்டன என்னும் காரணத்தாலே அவை இங்கு தனித்து நிரஸிக்கப்படவில்லை என்று கண்டுகொள்வது.

ஏகஸமிந்நஸம்பவாதிகரணம் முற்றிற்று.

पशुपत्यधिकरणम् ॥ (२-२-७)

सि-सू-पत्युरसामञ्जस्यात् ॥ (२-२-३५)

२६९. कापिलादिमतेष्वस्तु वेदबाह्येषु मादरः ।
सर्वज्ञरुद्रसंप्रोक्ते मते पाशुपते भृशम् ॥

२७०. आदरः कार्य एवेति वादोऽत्र विनिवार्यते ।
ईशस्सिद्धोऽनुमानेन स औपनिषदो न च ॥

## பஶுபத்யதி₄கரணம் ॥ 2–2–7 ॥

**ஸி. ஸூ:- பத்யுரஸாமஞ்ஜஸ்யாத் ॥ 2-2-35 ॥**

பத்யு.—பஶுபதியின மதம (ஆதரிககத்தக்கதலல), அஸாமஞ்ஜஸ்யாத்—பொருத்தமறறதாகையால்.

*269—*270. வேததநிற்குப் புறம்பான கபிலமதம முதலானவறறை ஒதுககித் தள்ளியது சரியே; 'ஸாவஜ்ஞ' [எலலாமறிநதவன] எனறு புகழபெறற உருததிரனுல கூறபபட்ட பாசுபதமதததில் மிகவும ஆத₃ரம வைககததககதேயனறே எனனும வாதம் இவ்வதி₄கரணததில தவிர்ககப்படுகிறது.*

*270*-273—பூாவபக்ஷம். காபாலிகர்கள, காளாமுக₂ா கள், பாஶுபதர்கள், சைவர்கள் எனறு சைவமததைச சேர்நதவாகள் நாலுவகைபபடுவர். இவர்கள் அனைவருமே, வேதத்திறகு முரண்பட்ட சைவாகமங்களிற சொன்ன ததவஹித புருஷார்ததக் கொள்கைகளை ஏற்பவர்கள். அவை யாவன — ஈஶன் அநுமானத்திலை ஸாதி₄ககபபடுபவனே யொழிய, உபனிஷத்துக்களால அறியப்படுகிறவனலலன. உலகிற்கு நிமித்தகாரணமும உபாத₃ாநகாரணமும வேறுபட்டவை;- பஶுபதியே நிமிததகாரணம, மூல ப்ரக்ருதியே உபாத₃ாநகாரணம், குயவன் மண்ணைக குடம முதலியவையாகச் செய்வதுபோல பசுபதி மூலப்ரக்ருதியை நாம் காணும் உலகாகப் படைககிறுன் எனறு சைவர்கள் அனைவரும கூறுகிறார்கள்.*

२७१. निमित्तोपादानयोश्च भेदः पशुपतिस्तथा।
निमित्तहेतुर्विश्वोपादानमव्याकृतं भवेत्॥
२७२. जगत्पशुपतिस्सर्वं कुलालादिर्घटादिवत्।
सृजत्येनं मुक्तिहेतुः मुद्रिकापञ्चधारणम्॥
२७३. सुराकुम्भे देवपूजा चात्मध्यानं भगे तथा।
इति वेदविरुद्धार्थान् शैवा आहुश्चतुर्विधाः॥

---

"முத்₃ரிகாஷட்கதத்த்வஜ்ஞ: பரமுத்₃ராவிஶாரத₃:।
ப₄கா₃ஸநஸ்த₂மாத்மாநம் த்₄யாத்வா நிர்வாணம் ருச்ச₂தி॥
கண்டி₂கா ருசகம் சைவ குண்ட₃லம் ச ஶிகா₂மணி:।
ப₄ஸ்ம யஜ்ஞோபவீதம் ச முத்₃ராஷட்கம் ப்ரசக்ஷதே॥
ஆபி₄ர் முத்₃ரிததே₃ஹஸ்து ந பூ₄ய இஹ ஜாயதே॥"

*[ஆறு முத்ரைகளின் உண்மையை அறிந்தவனும், பரமுத்₃ரையில் தேர்ந்தவனும், பெண் குறியின் மேலிருப்பவனாகத் தன்னை தியானித்து மோக்ஷமடைகிறான். (1) கண்டி₂கை (2) ருசகம் என்னும் மற்றொரு கழுத்தணி (3) காதணி (4) சிகா₂மணி (தலையணி) (5) ப₄ஸ்மம் (நீறு) (6) யஜ்ஞோபவீதம் ஆகிய ஆறு முத்ரைகளை தரிப்பவன் இவ்வுலகில் பிறவான்.] என்று காபாலிகாகள் ஆறு முத்₃ரைகளை தரிப்பதையும், பெண்குறியின்மேலிருப்பவனாகத் தன்னை தியானிப்பதையும் மோக்ஷ ஹேதுவாகக் கூறுகிறார்கள். காளாமுகர்கள் கபால (மனித மண்டையோட்டுப்) பாத்ரபோ₄ஜனம், சவ (பிணச்) சாம்பலில் குளிப்பது, அதைச்சாப்பிடுவது, தடி வைத்திருப்பது, கட்குடத்தை ஸ்தாபித்து, அதில் தேவபூஜை செய்வது முதலான காரியங்களால் இம்மை மறுமைப் பயன்களைப் பெறலாம் என்று கூறுகிறார்கள்.*

ருத்₃ராக்ஷகங்கணம் ஹஸ்தே ஜடா சைகா ச மஸ்தகே।
கபாலம் ப₄ஸ்மநா ஸ்நாநம்'

*[கையில் ருத்ராக்ஷகங்கணமும், தலையில் ஒன்றாக முடிந்த சடையும், மண்டையோடும், சாம்பலில் குளிப்பதும் (மோக்ஷ ஸாத₄னங்கள்.)] என்று சைவாகமங்களில் கூறப்பட்டிருப்பது பிரஸித்தம்.*

२७४. इदं मतं पशुपतेः व्याघाताच्च परस्परम्।
श्रुतेश्चैवं विरुद्धत्वात् असामञ्जस्यतो भृशम्॥
२७५. निश्रेयसार्थिभिर्नैवाऽऽदरणीयं विवेकिभिः।
वेदा जगन्निमित्तं चोपादानं च पुनः पुनः॥
२७६. नारायणं वदन्त्यस्य ब्रह्मणो वेदनात्मिका।
उपास्तिर्मुक्तिदा चेति तत्र तत्र श्रुता अपि॥

---

"தீ₃க்ஷாபரவேஶமாத்ரேண ப்₃ராஹ்மணோ ப₄வதி க்ஷணாத்।
காபாலம் வ்ரதமாஸ்த₂ாய யதிர் ப₄வதி மாநவ:॥"
[சிவதீ₃க்ஷை பெறுவதனாலேயே (மற்ற சாதியைச் சேர்ந்த மனிதன்) ஒரு கணத்தில் அந்தணனாகிறான். காபாலிக விரதத்தை அனுஷ்டிப்பதனால் (மற்ற ஆஶ்ரமத்தைச் சேர்ந்த) மனிதன் ஒரு கணத்தில் ஸந்யாஸியாகிறான்.] என்று எல்லா சைவர்களும் ஒரு கிரியையைச் செய்வதாலேயே வர்ணாஶ்ரமங்கள் மாறிவிடும் என்று ஒப்புக் கொள்ளுகிறார்கள்.

274—278. ஸித்தாந்தம் — முன்னுக்குப்பின் முரணா யிருக்கை, வேத₃விருத்₃த₄மாயிருக்கை முதலான காரணங் களால் மிகவும் அஸமஞ்ஜஸமாய் (பொருத்தமற்றதாய்) இருக்கையாலே, இந்த பஶுபதி மதம் மோக்ஷத்தை விரும்பும் விவேகிகளால் சிறிதும் ஆதரிக்கத்தக்கதல்ல. வேதங்கள் உலகிற்கு நிமித்தகாரணமாகவும், உபாத₃ான காரணமாகவும் நாராயணனையே நூற்றுக் கணக்கான விடங்களில் உத்₃கோ₄ஷிக்கின்றன, ப்₃ரஹ்மமாகிற இவனை தியானிப்பதாகிற உபாஸனத்தையே மோக்ஷகாரணமாகக் கூறுகின்றன. பரமபொருளைக் குறிக்குமிடங்களில் ஆங்காங்கு காணப்படும் சிவன், ருத்₃ரன் முதலான ஶப்தங்கள், அத் தகைய இடங்களில் காணப்படும் ஆகாஶம், இந்திரன் முதலான சப்தங்களைப்போலே நாராயணனுவாகத்தை யொட்டி நாராயணனையே குறிக்கின்றனவென்பது தெளிவு.

२७७. शिवादिशब्दा नारायणानुवाकानुसारतः।
नारायणपरा एव श्रुतं तत्र तथैव हि॥

२७८. अयं चार्थः पूर्वमेव सुस्पष्टं प्रतिपादितः।
अतो वेदविरुद्धत्वात् मतमेतदसङ्गतम्॥

सि-सू —अधिष्ठानानुपपत्तेश्च॥ (२-२-३६)

२७९. निमित्तमात्रेश्वरस्य कल्पनादनुमानतः।
दृष्टानुसारात्कर्तव्यमधिष्ठानं कुलालवत्॥

---

நாராயணனுவாகம் நாராயணனை பரப்₃ரஹ்மம், பரதத்துவம், பரஞ்சோதி, பரமாத்மா என்று ஐயமறத் திரிபறவன்றோ கூறுகின்றது. இவ்விஷயம் ஸர்வவ்யாக்₂யாநாதி₄கரணத்திலேயே மிகத்தெளிவாகக் கூறப்பட்டது. ஆக, இவ்வண்ணமாக வேதத்திற்கு முரண்பட்டதாகையால் பாஶுபதி மதம் பொருந்தாததேயாகும்.

ஸி. ஸூ- அதி₄ஷ்ட்டா₂நாநுபபத்தேஶ்ச ॥ 2-2-36 ॥

அதி₄ஷ்டா₂நாநுபபத்தே: ச—உபாத₃ாநகாரணம் முதலானவற்றை அதி₄ஷ்டி₂த்துநிற்பது (சரீரமற்ற)சிவனுக்குப் பொருந்தாதாகையாலும் (பசுபதி மதம் பொருந்தாது).

279-281. ஸித்தாந்தம். சைவமதத்தில் அநுமானத்தைக்கொண்டு, குடம் முதலானவற்றிற்குக் குயவனைப் போலே உலகிற்கு நிமித்த காரணமாக சிவனை ஸாதி₄க்கிறார்கள். இப்படி ஸாதி₄க்கும்போது, திருஷ்டாந்தமான குயவன் உபாத₃ாநகாரணமான மண்ணையும், ஸஹகாரிகாரணமான த₃ண்ட₃ம் சக்ரம் முதலானவற்றையும் அதி₄ஷ்டி₂ப்பதுபோலே, சிவனும் உபாத₃ானமான ப்ரக்ருதி முதலானவற்றை அதி₄ஷ்டி₂த்துநின்று உலகைப் படைப்பதாகக் கொள்ளவேண்டும். பசுபதியை தேஹமற்றவனாகப்

२८०. न युज्यते पशुपतेः प्रधानाधिष्ठितिः क्वचित्।
अदेहत्वात्सदेहानां ह्येवाधिष्ठितिरिष्यते॥

२८१. न शरीरित्वमस्य स्यात्तस्य सावयवस्य च।
नित्यत्वेऽनित्यतायां च प्राक् दोषाः परिकीर्तिताः॥

---

பாஶுபதர்கள் கொள்ளுகையால், தேஹமுடைய குயவன மண் முதலானவற்றை அதி₄ஷ்டி₂தது நின்று குடம முதலானவறறைச் செய்வதுபோலே சிவன் பரத₄ானத்தை அதி₄ஷ்டி₂தது நின்று உலகைபபடைப்பது எவ்வகையிலும் முடியாது. உலகில் சரீரமுடைய குயவன முதலானவர்களேயன்றோ உபாத₃ாநகாரணத்தை அதி₄ஷ்டி₂தது நிறகமுடிகிறது. சிவனுககும் சரீரமுண்டு என்று கொணடு விடலாமே — எனில அவயமுடையதான அவனுடைய சரீரத்தை நித்யமெனறு கொணடால, அவயவமுடைய உலகையே நிதயமெனறு கொண்டுவிடலாமாகையால. அதைப் படைப்பவனுக ஒருவனை அநுமானததாலே ஸாதி₄ககவேணடிய அவசியமிலலை, அந்த சரீரததை அநிதயமெனறு கொண்டால. அநத சரீரததைப படைபபவன வேறு யாருமிலலாமையால. இவன அதைப் படைககும போது வேறொரு சரீரததை உடையவனுகவும். அநத சரீரத்தைப் படைககும்போது மற்றொரு சரீரததை உடையவனுகவும் இபபடியே முடிவிலலாமல பல சரீரங்களைக கொள்ளவேணடியிருககையால அநவஸ்தை₂ எனனும தோ₃ஷம வருகிறது. ஆநுமாநிகேஶவர வாதததில் இககுறை வருமெனபதையும, இககுறை வாராம லிருபபதற்காகவே வேத₃ாந்திகளான நாம் ஶாஸத்ரத திலேயே ஈஶவரனை ஒபபுககொள்ளுகிறோம எனபதையும ஶாஸத்ரயோநித்வாதி₄கரண ஸ்ரீப₄ாஷ்யததிலேயே ஸ்ரீப₄ாஷ்யகாரர் விளககியுள்ளார். ஆகையால், அநுமானததால ஈஶ்வரனை ஸாதி₄க்கும் சைவமததில இக்குறை தவிாகக முடியாததேயாகும்.

सि-सू—करणवच्चेन्न भोगादिभ्यः ॥ (२-२-३७)

२८२. अशरीरस्य जीवस्य करणादिपरिग्रहः ।
यथोपपद्यते तद्वदीश्वरस्याप्यदेहिनः ॥

२८३. प्रकृत्यधिष्ठानमिति चेन्न पुण्यादिकर्मणाम् ।
फलभोगाय हि वपुराद्यधिष्ठानमात्मनः ॥

२८४. तद्वदस्यापि सर्वं स्यात्फलभोगाद्यपार्थिनुः ।
तस्मात्प्रधानाधिष्ठानसंभवो नेश्वरस्य हि ॥

---

ஸி. ஸூ:- கரணவச்சேந் ந போ4கா3தி3ப்4ய: ॥2-2-37॥

கரணவத் சேத்—(சரீரமற்ற ஜீவன்) இந்திரியங்கள், சரீரம் முதலானவற்றை அதி4ஷ்டி2ப்பதுபோல (சரீரமற்ற பசுபதியும் ப்ரக்ருதியை அதி4ஷ்டி2க்கலாமே) எனில் போ4கா3தி3ப்4ய—(அப்போது ஜீவனுக்குப்போலே) புண்யபாபகர்ம ப2லபோ4கம் முதலியவையும் ஏற்படுமாகையால், ந—(இந்த த்ருஷ்டாந்தம்) பொருந்தாது.

282-284. ஸித்தாந்தம். சரீரமற்ற ஜீவன் எப்படித் தன் இந்திரியங்களையும், சரீரத்தையும் வேறொரு சரீரத்தின் உதவியில்லாமல் தானே அதி4ஷ்டி2த்து நிற்கிறானோ, அப்படியே சரீரமற்ற சிவனும் மூலப்ரக்ருதியை அதி4ஷ்டி2த்து நிற்கக் குறையில்லை — என்று சைவர்கள் கூறுவார்களாகில், ஜீவனுக்குப் புண்யபாப கர்மங்களின் அநுபவத்திற்காகவே அத்தகைய அதி4ஷ்டா2நம் ஏற்பட்டிருப்பதுபோலே, ஈஶனான பசுபதிக்கும் புண்யபாப கர்மாநுபவத்திற்காகவே சரீராதி4ஷ்டா2நம் என்று கொள்ளவேண்டிவரும். ஈஶ்வரனுக்குப் புண்யபாப கர்மங்களையும், அதனால் உண்டாகும் ஸுக2து3:க2ங்கள் முதலானவற்றையும் ஒப்புக்கொள்ள முடியாதாகையால் பசுபதி மதத்தில் ஈஶ்வரன் ப்ரக்ருதியை அதி4ஷ்டி2த்து நிற்பது எவ்வகையிலும் பொருந்தாது.

सि-सू--अन्तवत्त्वमसर्वज्ञता वा ॥ (२-२-३८)

२८५. पुण्यापुण्यात्मकादृष्टवत्त्वे पशुपतेस्तदा ।
अन्तवत्त्वं जीववच्च सृष्टिसंहार्यता तथा ॥

२८६. असर्वज्ञत्वं च भवेत् तस्मात्सर्वप्रकारतः ।
इदं नादरणीयं स्यात् मतं मुक्तिफलेप्सुभिः ॥

॥ इति पशुपत्यधिकरणम् ॥

---

**ஸி. ஸூ:- அந்தவத்த்வமஸர்வஜ்ஞதா வா ॥ 2-2-38॥**

**அநதவததவம**—(புணயபாபங்களை ஒப்புகெகொணடால ஜீவனைபபோல சிவனுககும்) ஸ்ருஷ்டிக்கபபட்டு ஸமஹரிக கபபடுகையால உணடாகும அநித்யதவமாகிற தாழவும. **அஸாவஜ்ஞதா வா**—எலலாமறியாதவனெனனும் தாழவும ஏறபடும. (ஆகையால பசுபதிமதம் பொருந்தாததேயாகும)

285-286. சரீரததின அதிஷ்ட்டானத்தை சிவனுககு ஒபபுக்கொளவதறகாக, ஜீவனுககுபபோலே அவனுககும புண்யபாபஙகளை ஏறறுககொணடால, ஜீவனைபபோலே புண்யபாபாநுகுணமாகப படைககபபட்டு அழிககப்படும அநிதயபபொருளாகவும, புண்யபாபங்களுககேறப அறிவில ஏறறத்தாழவுளளவனாக வேண்டிவருகையாலே, ஸாவ ஜ்ஞனலலாதவனாகவும (எலலாமறியாதவனாகவும) அவனைக கொள்ளவேண்டிவரும. பிறவாயாககைப் பெரியோனாய், அனைவரையும ஸமஹரிபபவனாயிருந்துகொண்டு தான எவ ராலும ஸமஹரிக்கப்படாதவனாய், ஸாவஜ்ஞன் என்று பெயர்பெற்றவனை ஈஸவரனாக அபிமாநிககப்படுகிற வனுக்கு இவை பொருநதமாட்டா. ஆகையால், மோக்ஷ பலனை விருமபுகிறவர்களால், சைவமதம் எல்லாப்படியாலும அநாதரிககததககதேயாகும.

பசுபதயதிகரணம முறறிறறு.

उत्पत्त्यसंभवाधिकरणम् ॥ २-२-८ ॥

( पाञ्चरात्राधिकरणम् )

पू-सू-उत्पत्त्यसंभवात् ॥ (२-२-३९)

२८७. साङ्ख्यादितन्त्रसामान्यात्पाञ्चरात्रागमेऽपि च ।
साक्षाद्भगवता प्रोक्ते मोक्षसाधनबोधिनि ॥

२८८. अप्रामाण्याशङ्किपरपक्षोऽत्र क्षिप्यते नयैः ।
पू असंभवन्त्या जीवानामुत्पत्तेरभिधानतः ॥

२८९. न प्रमाणं पाञ्चरात्रागमस्तन्त्रेऽत्र कथ्यते ।
सङ्कर्षणो नाम जीवः वासुदेवात्प्रजायते ॥

## உத்பத்த்யஸம்ப₄வாதி₄கரணம் ॥ 2-2-8 ॥

(பாஞ்சராத்ராதி₄கரணம்)

பூ-ஸூ:-உத்பத்த்யஸம்ப₄வாத் ॥ 2-2-39 ॥

உத்பத்த்யஸம்ப₄வாத்— (ஜீவனுக்குப் பாஞ்சராத்ராக₃மத்தில் கூறப்படும்) உத்பத்தி ஒட்டாதாகையால். (இந்த ஆக₃மம் அப்ரமாணம்)

287-*288. வேத₃விருத்₃த₄ பக்ஷங்களை நிரஸிக்கும் இப்பாத₃த்தின் கடைசி அதி₄கரணமான இப்பாஞ்சராத்ராதி₄கரணத்தில், பகவானை நாராயணனாலே நேரே அருளிச்செய்யப்பட்டதாய், மோக்ஷஸாத₄நங்களைக் கூறுவதான பாஞ்சராத்ராக₃மத்திலும், 'ஸாங்க்₂யம் முதலான அவைதி₃க சாஸ்த்ரங்களிற்போலே அப்ராமாண்யமுண்டு' என்று கூறும் அவைதி₃கபக்ஷம் யுக்திகளாலே நிரஸிக்கப்படுகிறது.

288*-291. பூர்வபக்ஷம். இந்தப் பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில், 'வாஸுதே₃வாத் ஸங்கர்ஷணோ நாம ஜீவோ ஜாயதே, ஸங்கர்ஷணாத் ப்ரத்₃யும்ந ஸம்ஜ்ஞம் மந ஜாயதே தஸ்மாத₃நிருத்₃த₄ஸம்ஜ்ஞோऽஹங்காரோ ஜாயதே ॥' [வாஸு

२९०. सङ्कर्षणाच्च प्रद्युम्नसंज्ञमुत्पद्यते मनः।
अहङ्कारोऽनिरुद्धाख्यः तस्माज्जायत इत्यपि॥

२९१. अत्र श्रुतिविरुद्धा हि जीवोत्पत्तिः प्रतीयते।
श्रुतौ "न जायते" इति तदनादित्वमुच्यते॥

पू-सू—न च कर्तुः करणम्॥ (२-२-४०)

---

தேவனிடமிருந்து ஸங்கர்ஷணன் எனப்படும் ஜீவன் உண்டாகிறான், ஸங்கர்ஷணனிடமிருந்து, ப்ரத்₃யும்நன் என்னும் பெயருடைய மனம் உண்டாகிறது, அந்த ப்ரத்யும்நனிடமிருந்து, அநிருத்₃த₄ன் என்னும் பெயருடைய அஹங்காரம் உண்டாகிறது] என்று கூறப்படுகிறது, 'ஸங்கர்ஷணோ நாம ஜீவ' 'ப்ரத்யும்ந ஸம்ஜ்ஞம் மந 'அநிருத்₃த₄ ஸமஜ்ஞோ ऽஹங்கார:' என்று 'ஜீவ' 'மந' 'அஹங்கார' என்னும் விசேஷ்ய பதங்களால் ஜீவாதி₃களை எடுத்து, "ஸங்கர்ஷணோ நாம—ப்ரத்₃யும்ந ஸம்ஜ்ஞம்—அநிருத்₃த₄ ஸம்ஜ்ஞ" என்னும் விசேஷணபதங்களால் அந்த ஜீவன் முதலானோர்க்கு ஸங்கர்ஷணன் முதலான பெயர்களிடப் படுவதாக விளங்குகிறபடியால், இந்த சாஸ்திரத்தில் ஜீவன் முதலானோர்க்கு உத்பத்தி சொல்லப்படுகிறது என்பதை மறுக்கவொண்ணாது. இவற்றில் ஜீவனுக்கு உத்பத்தியைக் கூறுவது, வேத₃ங்களில் "ந ஜாயதே மரியதே வா விபஸ்சித" [கட 2-18] [அறிவாளியான ஜீவன் பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை] முதலான விடங்களில் ஜீவன் உத்பத்தியற்றவன் என்று கூறியிருப்பதற்கு முரண்பட்டதாகும். இவ்வண்ணமாக ஶ்ருதி விருத்₃த₄மாய் யுக்திகளுக்கும் பொருந்தாததான ஜீவோத்பத்தியைக் கூறுகையால் இப்பாஞ்சராத்ராக₃மம் ப்ரமாணமாகமாட்டாது.

ஸூ-ஸூ:-ந ச கர்த்து: கரணம் ॥ 2-2-40 ॥

கர்த்து:—கர்த்தாவான ஜீவனிடமிருந்து, கரணம் ச—கரணமான மனம் (உண்டாகிறது என்று கூறுவதும்) ந—பொருந்தாது.

२९५. अत्र विज्ञानादिशब्दात् परब्रह्माभिधीयते।
सङ्कर्षणादिमूर्तीनां ब्रह्मत्वे तिसृणां सति॥

२९६. तदर्थबोधनपरशास्त्रस्यास्य प्रमाणता।
निषिध्यते नैव, वासुदेवाख्यं ब्रह्म तत्परम्॥

२९७. आश्रिताश्रयणीयत्वसिद्धये श्रितवत्सलम्।
चतुर्धा स्वेच्छयैवाविर्भवतीति च कथ्यते॥

---

ஸாதி$_4$க்கப்படுகிறது. இந்த ஸூத்ரத்தில் விஜ்ஞாநாதி$_3$ ஶப்$_3$த$_3$த்தால் விஜ்ஞாநஸ்வரூபமாய், ஆதி$_3$யான பரம் பொருள் கூறப்படுகிறது. ஜீவாதி$_3$ ஶப்$_3$த$_3$ங்களோடு ஸமாநாதி$_4$கரணமாக (ஒரே வேற்றுமையில்) படிக்கப்பட்ட ஸங்கர்ஷணன் ப்ரத்$_2$யும்நன், அநிருத்$_3$த$_4$ன் என்னும் மூன்று பதங்களும் பரம்பொருளின் மூன்று (வ்யூஹ) மூர்த்தி களைக் குறிப்பதாகக் கொண்டிருக்கையில், ஜீவாதி$_3$களுக்கு உத்பத்தியைக் கூறுமல், வாஸுதே$_3$வமூர்த்தியாகிற மூல மூர்த்தியிடமிருந்து ஸங்கர்ஷணனும், அவனிடமிருந்து ப்ரத்$_3$யும்நனும், அவனிடமிருந்து அநிருத்$_3$த$_4$னும் உண்டாவதையே இந்த ஶாஸ்த்ரம் கூறுகிறது என்று ஏற் பட்டுவிடுமாகையால், ஶாஸ்த்ரத்தின் ப்ராமாண்யம் தள்ளப் பட்டதாகாது. இப்பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தை அறியாத வர்களே இதில் ஸங்கர்ஷணன் முதலான ஶப்தங்களால் ஜீவன் முதலானோரை எடுத்து அவர்களுக்கு உத்பத்தி கூறப் படுவதாகச் சொல்லுவார்கள். இந்த சாஸ்திரத்தை ஆராய்ந்தால், அதில் பலவிடங்களில் ஆஶ்ரிதவத்ஸலனை வாஸுதே$_3$வன் என்னும் பரம்பொருள் ஆஶ்ரிதர்கள் (அடியார்கள்) தன்னை ஆஶ்ரயிப்பதற்காக, வாஸுதே$_3$வன், ஸங்கர்ஷணன், ப்ரத்$_3$யும்நன், அநிருத்$_3$த$_4$ன் என்னும் நாலு (வ்யூஹ)மூர்த்திகளாகத் தானே தன் இச்சையால் அவதரிப்ப தாகக் கூறப்படுகிறது; இந்த நாலு மூர்த்திகளை உபாஸிப்பது ப்$_3$ரஹ்மத்தை உபாஸிப்பதே என்றும் கூறப்படுகிறது

२९८. चातुरात्म्योपासनं तत् ब्रह्मोपासनमित्यपि।
अतस्सङ्कर्षणादीनां परब्रह्मण एव हि॥

२९९. स्वेच्छाविग्रहरूपत्वात् तादृगर्थावबोधिनः।
शास्त्रस्यास्य प्रमाणत्वाप्रतिषेधो हि युज्यते॥

---

"காததவ்யதவேந வை யதர சாதுராதமய முபாஸயதே।
கரமாக3தை ஸவஸமஜஞாபி4 ப்3ராஹமணைராக3மம து தத॥"

[வம்ஶபரமபரைப்படி வந்த அந்தணர்களாலே. (ஸங்கர்ஷணன் முதலான) பெயர்களை முனனிட்டுக் கொணடு. பகவானுடைய நாலு வ்யூஹஙகளும பாஞ்சராதராக3மத்தினபடி கைஙகாயபுததியுடன உபாஸிக்கபபடுகிறார்கள்.] எனறு பௌஷ்கர ஸமஹிதையிலும.

"ப்3ராஹமணாநாம் ஹி ஸத்3ப்3ரஹ்மவாஸுதே3வாக்3ய
யாஜிநாம்।
விவேகத3ம பரம் ஶாஸ்த்ரம ப்3ரஹ்மோபநிஷத3ம் மஹத்॥"

['ஸத' 'ப்3ரஹ்மம்' என்று உபனிஷததுககளில ஓதபபடும் வாஸுதேவனைத திருவாராதனம செய்யும் அந்தணர்களுக்குப் பரமபொருளறிவையளிபபதாய். மேலான ஶாஸ்திரமாய் மேலான ப்3ரஹ்மோபனிஷததாயிருபபது பாஞ்சராத்ரம்] என்று ஸாத்வத ஸம்ஹிதையிலும் கூறப்பட்டதைக காணலாம். ஆக, பரமபொருளான வாஸுதேவனே. "அஜாயமானோ ப3ஹுதா4 விஜாயதே" [பு ஸூ] [பிறபபற்றவனுயிருந்தும் பலபடியாகப் பிறககிறுன பரம புருஷன்.] என்று ஶ்ருதியில் சொன்னபடியே. ஸங்கர்ஷணன் முதலான வ்யூஹரூபங்களையும். ராமன். கிருஷ்ணன் முதலான விப4வரூபஙகளையும். அந்தர்யாமி ரூபங்களையும். அர்ச்சாரூபங்களையும் தன் இச்சையினுலே எடுப்பதாக இந்த ஶாஸ்தரத்தில் கூறபபடுகிறதாகையால, அந்த ஸஙகர்ஷணாதி3களுககுப் பிறப்பைககூறும இந்த ஶாஸ்திரத்திற்கு பராமாணயத்தைத தள்ளுவது சிறிதும்பொருந்தாது; ஸஙகர்ஷணன. ப்ரத்3யும்னம். அநிருத்3த4ன் என்னும் மூன்று

३००. तत्र जीवमनोहङ्कारतत्त्वानां क्रमात्तथा।
अधिष्ठातार उच्यन्ते त्रयस्सङ्कर्षणादयः॥

३०१. तेषां जीवादिशब्दैश्च भाषणं न विरुध्यते।
प्राणाकाशादिशब्दैश्च यथा ब्रह्मावबोधनम्॥

सि-सू-विप्रतिषेधाच्च॥ (२-२-४२)

---

வ்யூஹ மூர்த்திகளும், முறையே ஜீவன், மனம் அஹங்காரம் எனனும் தத்துவங்களை அதி4ஷ்டி2த்துநிற்கும் அபி4மானி தேவதைகளாகையால், ஸங்கர்ஷணாதி பதங்களை ஜீவன் முதலான பத3ங்களோடு ஒரே வேற்றுமையில் இந்த ஶாஸ்திரத்தைச்சேர்ந்த பரமஸம்ஹிதாவசனங்கள் படிக்கின்றன. ஆகையால் அந்த வசனங்களைக்கொண்டு ஜீவன் முதலானாக்கு உற்பத்தி கூறப்படுவதாகச் சொல்லுவது பொருந்தாது. ப்ராணன், ஆகாஶம் முதலானவற்றை அதி4ஷ்ட்டி2த்து நிற்கும் பரம்பொருளை ப்ராணாகாஶாதி3 ஶப்3த3ங்களால ஶ்ருதி குறிப்பதுபோலே, இந்த ஶாஸ்திரமும் அதி4ஷ்டி2க்கப்படுபவர்களைச் சொல்லும் ஜீவன்முதலான ஶப்3த3ங்களால் அதி4ஷ்டா2தாக்களான ஸங்கர்ஷணன் முதலானாரைப் பேசுகிறது ஆயிரக்கணக்கானவிடங்களில் இந்த ஶாஸ்திரத்தில ஸங்கர்ஷணாதி3களைப் பரம்பொருளின் வ்யூஹ மூர்த்திகளாகவே குறித்திருப்பதையொட்டி "ஸங்கர்ஷணோ நாம ஜீவோ. ஜாயதே" என்று ஒரு மூலையில் உள்ள ப்ரயோகத்தில் விஶேஷணவிஶேஷயங்களைமாற்றி "ஜீவனுக்கு அபி4மானியான ஸங்கர்ஷணன் பிறக்கிறான்' என்றே தாத்பர்யார்த்த2ம் கொள்ளவேணும். "ஜீவ — ஜாயதே" என்றவுடன், "ஜீவாத பரத்3யுமநஸம்ஜ்ஞும் மந." என்று கூறாமல, "ஸங்கர்ஷணாத பரத்3யும்நஸம்ஜ்ஞும் மந' என்று கூறியிருப்பதிலிருந்தும், ஸங்கர்ஷண ஶப்3த3மே விஶேஷ்ய பத2ம் என விளங்குகிறது. ஆக இப்படி, பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தின் ப்ராமாண்யம் தள்ளப்படாததேயாகிறது.

ஸி-ஸூ:-விப்ரதிஷேதா4ச்ச ॥ 2-2-42 ॥

३०२. "स ह्यनादिरनन्तश्च परमार्थेन निश्चितः"।
इत्यस्मिन्नपि तन्त्रे च जीवोत्पत्तिनिषेधतः॥

३०३. अविरुद्धमिदं तन्त्रं प्रमाणतममुच्यते।
तस्मान्महाभारते च सूत्रकृद्बादरायणः॥

३०४. "पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता नारायणस्स्वयम्।"
इ युक्त्यैतद्वक्तुराप्ततमत्वं चास्य कृत्स्नशः॥

---

விப்ரதிஷேத₄ாத் ச—(இந்தப் பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்திலேயே ஜீவோத்பத்திவாதம்) மறுக்கப்பட்டிருக்கையாலும் (இதன் ப்ராமாண்யம் தள்ளப்படாததேயாகும்.)

302 – 308—ஸித்தாந்தம்—எந்தப் பரமஸம்ஹிதையில் முற்கூறியபடி "ஸங்கர்ஷணோ நாம ஜீவோ ஜாயதே" என்று படிக்கப்பட்டதோ, அதே பரமஸம்ஹிதையில் "ஸ ஹ்யநாதி₃ரநந்தஶ்ச பரமார்த்தே₂ந நிஶ்சித" [அந்த ஜீவன் ஆதியும், அந்தமும் அற்ற உண்மைப்பொருளாக நிஶ்சயிக்கப்பட்டிருக்கிறான்.] என்று ஜீவனுக்கு உற்பத்தியும், முடிவும் கிடையாது என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால், "ஜீவோ ஜாயதே" என்னும் வாக்யத்தில், இதற்கு முரண்பட்ட ஜீவோத்பத்தி கூறப்படுவதாகச் சொல்லுவது பொருந்தாது, ஸங்கர்ஷணன் என்னும் வ்யூஹமூர்த்தியின் உற்பத்தி (அவதாரம்) கூறப்படுவதாகவே கொள்ளவேண்டும். ஆகையால், இந்த பாஞ்சராத்ராக₃மம் ஶ்ருதி விரோத₄ம் சிறிதுமற்றதாய், மிகச்சிறந்த ப்ரமாணமாகவே அறிவாளிகளால் கொண்டாடப்படுகிறது. அதனாலேயே தத்துவமறிந்தவர்களிற் சிறந்தவராய ஸூத்ரகாரரான பா₃த₃ராயணரென்னும் வ்யாஸர் மஹாபாரதத்தில், "பாஞ்சராத்ரஸ்ய க்ருத்ஸ்நஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்" [பாஞ்சராத்ரம் முழுவதையும் உபதேசித்தவர் ஸாக்ஷாந்நாராயணனேயாவார்.] என்று கூறுவதன் மூலம் இப்பாஞ்சராத்ரத்தை உபதேசித்தவர் மிக

३०५. प्रामाण्यं बोधयाञ्चक्रे सुस्पष्टं तत्त्ववित्तमः।
तस्माद्विलक्षणं शास्त्रं निस्समाभ्यधिकं मतम्॥

३०६. पञ्चरात्रस्य पूर्वोक्तागमवच्चाप्रमाणताम्।
अनिच्छतस्सूत्रकृतस्तदप्रामाण्यवादिनाम्॥

३०७. पक्षस्य परपक्षत्वात् पादेऽस्मिन् तन्निराकृतिः।
युक्ताऽतोऽस्या अधिकृतेः पादसङ्गतिरक्षता॥

---

மிகச் சிறந்த ஆப்தர் என்றும், இந்த சாஸ்திரம் முழுவதுமே ப்ரமாணமென்றும் மிகத்தெளிவாகக் காட்டினார். ஆகையால், இந்த சாஸ்திரம் மிகச்சிறந்ததாய், ஒத்ததும், மிக்கதும் இல்லாததாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விடத்தில் ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. "இந்தப் பாத3த்தில் வேத3விருத்3த4மான பரபக்ஷங்களையே ஒவ்வோரதி4கரணத்திலும் களைவதைக் காண்கிறோம்; அதையொட்டிப் பார்க்கும்போது, இப்பாத3த்தில் தள்ளப்படும் ஸாங்க்2ய யோக3 தார்க்கிக ஜைந பௌ3த்3த4 பாசுபத மதங்களைப்போலே, இப்பாஞ்சராத்ரமதமும் தள்ளத்தக்க அவைதிகமதம் என்றன்றோ கொள்ளவேண்டும் என்பது அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதா4நம் பின்வருமாறு —ஸூத்ரகாரர் பாஞ்சராத்ரத்தைப் பரமப்ரமாணமாகப் பாரதத்தில் உத்3கோ4ஷித்திருக்கிறார். ஆகையால் இப்பாதத்தில் நிரஸிக்கப்பட்ட மற்ற மதங்களைப்போலே இதையும் அப்ரமாணமாக அவர் கருதுகிறார் என்று கூறமுடியாது. ஆகையால், "ஜீவோத்பத்தியைக்கூறும் இந்தப் பாஞ்சராத்ரம் அப்ரமாணம்" என்று கூறும் அவைதிகர்களின் பக்ஷத்தை முதலிரண்டு ஸூத்ரங்களால் எடுத்து, மேலிரண்டு ஸூத்ரங்களாலே அதைத்தள்ளி தன்னுடைய மதம் பாஞ்சராத்ர மதமே என்று ஸூத்ரகாரர் காட்டுகிறார் என்றே கொள்ளவேண்டும். இப்படிக் கொண்டால் பரபக்ஷங்களைத் தள்ளும் பாத3த்தில் இவ்வதி4கரணம் இடம் பெற்றிருப்பதும் குறையறப் பொருந்திவிடுகிறது.

